சுதேசமித்திரன்
வாரப் பதிப்பு

★

சுபானு௵ மாசி௴ 29உ (12 - 3 - '44)




# ஏன் இந்த சீர்கேடு?

★

நாட்டில் அமைதியும், சுபிட்சமும் நிலவி வந்த நாட்களிலேயே இந்தியர்களது வாழ்க்கை நிலை திருப்திகரமில்லாமலேதான் இருந்திருக்கிறது. இப்போதோ வென்றால் கேட்கவே வேண்டியதில்லை. யுத்த காலம்; முதலிரண்டு வருஷங்களில் ஐரோப்பாவில் மும்முரமாக நடந்து வந்த யுத்தத்தின் விளைவு இந்தியாவையும் வெகுவாகப் பாதித்தது. போர் தற்போது இந்தியாவின் கரையருகே நெருங்கிவிட்டது. நாட்டினருக்கு ஏற்பட்டிருக்கும் அல்லல்களுக்குக் கங்குகரையே இல்லை. சமீபத்தில் டில்லியிலே நடந்த 17-வது இந்திய வர்த்தக சம்மேளன மகாநாட்டிற்குத் தலைமை வகித்துப் பேசிய குமாரராஜா ஸர் முத்தைய செட்டியார் நாட்டிலுள்ள கஷ்டங்களையெல்லாம் வரிசைப்படுத்தி எடுத்துக் காட்டினார்.

இன்று மலிந்து கிடக்கும், துன்பங்களும், தொல்லைகளும் தீர வேண்டுமானால் ஜனங்களின் நம்பிக்கைக்கும், நன்மதிப்புக்கும் பாத்திரமாகவுள்ள இந்தியத் தலைவர்கள் அதிகார பீடத்தில் இருக்க வேண்டும். ஆனால் நிலைமை அப்படியில்லை. கஷ்டங்களும் சிக்கல்களும் பெருகிவருவதற்குப் பொறுப்பாளி தற்போதைய அதிகார வர்க்கமே என்பது தெளிவு. நியாயசித்தமுடைய எவரும் இதை ஆக்ஷேபிப்பதற்கில்லை. சர்க்கார் செயல்களையோ, அல்லது கொள்கைகளையோ எதிர்த்து அதிருப்தியைத் தேடிக் கொள்ளக்கூடியவரன்று ஸர் முத்தைய செட்டியார்! அவர்கூட இந்த சீர்கேடான நிலைமைகளுக்குத் தற்போதைய நிர்வாகமே காரணம் என்று துணிவுடன் கூறிவிட்டார்! எவ்வளவு தூரம் நிலைமை சகிக்காமல் போயிருக்கிறது என்பதற்கு வேறென்ன ருசு வேண்டும்? இன்றுள்ள ஆட்சி வர்க்கத்துக்குத் தீர்க்க தரிசனம் இருந்திருக்குமாயின் பட்டினி எமனுக்கு ஆயிரக்கணக்கானவர்கள் பலியாகி இருக்கமாட்டார்கள்; இந்நாட்டிலுள்ள இயற்கை சாதனங்களையும், வளத்தையும் எவ்வளவோ உபயோககரமாகப் பயன்படுத்திக்கொண்டிருக்கலாம்; உணவுப்பொருளைப் பெருக்கவேண்டுமென்று தனியாக ஓர் இயக்கத்தை நடத்தும்படியான கதியும் ஏற்பட்டிராது. இவற்றிற்கெல்லாம் சிரத்தை வேண்டும். யாருக்கு இச்சிரத்தை உண்டு? ஜனப்பிரதிநிதிகளுக்கா? அல்லது அந்நிய அதிகார வர்க்கத்துக்கா? இன்றைய நிலைமையே இதற்குப் பதில் தரும்.

காலப்பிற்பாடான பின்னர் செலவாணிப் பெருக்கத்தைச் சரிசெய்து சீர்படுத்தவேண்டுமென்ற உணர்வு ஏற்பட்டது. ஆனால் அதைத் தடுக்கச் செய்த சர்க்கார் முயற்சிகள் நேர் மாறான பலனையே தருவதாகவிருக்கிறது. இதையும் குமாரராஜா தெளிவுபடுத்தியிருக்கிறார். தங்க விற்பனை, ஜனங்களுக்கு முக்கியமாகத் தேவையான சரக்குகள் தருவித்தல் முதலியவைபற்றி சர்க்கார் கொண்டிருக்கும் மனோபாவம் கேட்டைத் தணிக்க உதவி செய்வதாக இல்லை. அத்தோடு மேலும் பல கேடுகளை விளைவிக்கும்படியும் இருக்கிறது.

ஏற்றுமதி-இறக்குமதி விஷயத்தில் இந்தியாவுக்கு உரிய ஸ்தானம் கிட்டாமல் சர்க்கார் பிற கம்பெனிகளுக்கு உதவியளிக்கின்றனர். இதையும் ஸர் குமாரராஜா நன்கு தெளிவுபடுத்தியுள்ளார். இந்திய ஸ்தாபனம் ஒன்றை இதற்காக சிருஷ்டிக்க வேண்டுமென்பது அவரது யோசனை. இந்திய ஸ்டர்லிங் ஐவேஜியைப்பற்றி பிரிட்டிஷ் பத்திரிகைகள் செய்யும் புரட்டையும் அவர் உடைத்துக் கூறினார். இதுபோன்ற விபரீதங்கள் மறைய வேண்டினால் தேசிய சர்க்கார் ஏற்பட வேண்டும். தலைவர்கள் சிறையிலிருந்து விடுதலை பெற்றாலன்றி இது சாத்தியமா? சர்க்கார் கொண்டுள்ள பிடிவாத மனோபாவம் இதற்குச் சாதகமாக வில்லையென்பது தெளிவு.

# சென்ற வார நிகழ்ச்சிகள்

## ஆகாகான் அரண்மனையிலுள்ள கைதிகள் மாதச் செலவு ரூ. 550

சமீபத்தில் மத்ய சட்டசபையில், கேள்வி நேரத்தின்போது ஸ்ரீ கே. ஸி. நியோகிக்குப் பதில் அளிக்கையில் ஹோம் மெம்பர் சர் மாக்ஸ்வெல் சொன்னதாவது:—

"காந்திஜி உள்பட, ஆகாகான் அரண்மனையில் காவலில் வைக்கப்பட்டிருப்பவருக்கு மாதம் ரூ. 550, செலவு செய்ய அனுமதிக்கப்பட்டிருக்கிறது. காரியக்கமிட்டி அங்கத்தினர்களுக்கு தலா மாதம் அனுமதிக்கப்பட்ட தொகை ரூ. 100.

காந்திஜியோ அல்லது காரியக் கமிட்டி அங்கத்தினர்களோ தங்கள் சௌகரியத்திற்கான சாமான்களோ அல்லது பரிசிலனை செய்து அங்கீகரிக்கப்பட்ட புஸ்தகங்களோ பெற்றுக் கொள்வதற்கு யாதொரு தடையும் கிடையாது. இவர்களுக்கு ஏராளமான புஸ்தகங்கள் அனுமதிக்கப்பட்டுள்ளன.

தங்கள் உறவினரையோ அல்லது நண்பர்களையோ கண்டு பேசக் காந்திஜிக்கும், காரியக் கமிட்டி அங்கத்தினர்களுக்கும் தடை விதிக்கப்பட்டிருக்கிறது. காரியக்கமிட்டி அங்கத்தினர் விஷயத்தில் இது கடுமையாக அனுஷ்டிக்கப்படுகிறது.

* * * *

## ஜப்பான் அபாயம் தினசரி இருந்து வருகிறது

கொழும்பில் விவசாய, கைத்தொழில், சுகாதாரக் கண்காக்ஷியைத் திறந்து வைக்கும் பொழுது இலங்கை சேனாதிபதி சர் ஜாப்ரே பேட்டன் குறிப்பிட்டதாவது:—

யுத்தப்போக்கு ஆதரவாக மாறியிருப்பதை நாம் கண்டு விட்டோம். உலகையே நசுக்க விரும்பிய நமது எதிரிகள் இப்பொழுது நன்கு அடிபட்டு வருகின்றனர். எனினும் அளவுக்கு மீறிய நம்பிக்கை உதவாது. இன்னும் ஜப்பானியருக்கு ஏராளமான விமான, கடல் தரைப் படைகள் உள்ளன. சேதத்தைப் பொருட்படுத்தாமல் தோல்வியை முடிந்தவரை ஒத்தி வைக்க அவர்கள் முயல்வர்.

விமானப்படையெடுப்பு எச்சரிக்கை ஏற்பாடுகள் இன்னும் இருந்து வருவது அத்யாவசியம். வங்காளக் குடாக் கடலையடுத்துள்ள நாடுகளிலிருந்து ஜப்பானியர் விரட்டப்படும் வரை இவ்வபாயம் இருந்துவரும். இன்னும் எதிரியின் அபாயம் தினசரி இருந்து வருகிறது.

* * * *

## லூயி பிஷர் எழுதிய "ஸாம்ராஜ்ய"த்துக்குத் தடை

மிஸ்டர் லூயி பிஷர் எழுதி நியூயார்க்கில் பிரசுரமாகியிருக்கும் "ஸாம்ராஜ்யம்" என்ற புத்தகத்தின் பிரதியையோ, அதன் மொழிபெயர்ப்புகளையோ அல்லது அதிலிருந்து எடுக்கப்பட்ட பகுதிகள் அடங்கிய நூலையோ பிரிட்டிஷ் இந்தியாவிற்குள் கொண்டு வரக் கூடாதென்று இந்திய சர்க்கார் தடை செய்திருக்கிறார்கள்.

* * * * *

## 'புத்தர் சினிமா படம் பிடிக்கக்கூடாது'

இலங்கை ஸ்டேட் கவுன்சிலில், ஒரு தனிப்பட்ட மெம்பர், இந்தியாவில் புத்தர் வாழ்க்கையை சினிமாப்படம் பிடிக்க ஒரு இந்தியக்கம்பெனி முயன்று வருவதாகவும், அதனால் உலகெங்கும் உள்ள புத்தர்களின் மத உணர்ச்சிக்குக் கெடுதி விளையுமெனவும், ஆதலால் அதைத் தடைசெய்ய இந்திய சர்க்காருடன் மந்திரிசபை தக்க நடவடிக்கையெடுக்க வேண்டுமெனவும் கோரிக்கொணர்ந்த தீர்மானம் ஏகமனதாக அங்கீகரிக்கப்பட்டது.

* * * *

## பி. ஏ. பரீட்சை தேற 19 வருஷம்!

கல்கத்தா சர்வகலா சாலை பட்டமளிப்பு விழாவில் தமது 19-வது பிரயத்தனத்தில் பி. ஏ. பரீட்சையில் தேறிய ஸ்ரீ காளி மோகன டே பட்டம் பெற வந்திருந்தார்.

அவரை விசேஷமாக வரவேற்று டாக்டர் பி. எல். ராய் ஸ்ரீ டே ஐம்பது வயது சென்றவரென்றும், தமது வாழ்க்கையின் சிறந்த பாகத்தை இதில் வெற்றிபெற அவர் செலவிட்டுள்ளாரென்றும் அவர் ராபர்ட் புரூஸ் போன்றவரெனவும் 1896-லிருந்து பரீட்சைக்கு ஆஜராகி 1922—ல் தேறிய டாக்டர் நந்தனை இவருடன் ஒப்பிடலாமென்றும் கூறினார்.

* * * *

## 10 தடவை மணந்த 125 வயது முஸ்லீம்!

போப்பாலிலிருந்து சுமார் 18 மைல் தூரத்தில் இருக்கிறது நர்வின் என்ற கிராமம். அங்கு ஹாதிகுலாம் மகம்மது என்று ஒருவர் வசித்து வருகிறார். இவருக்கு வயது 125. போலீஸ் கான்ஸ்டபிளாக இருந்து 75 வருஷங்களுக்கு முன்பு ரிடயரானார்; இப்பொழுது ஒரு பெரிய ஜமீன்தார் இவர்.

குலாம் மகம்மது 10 தடவை கல்யாணம் செய்து கொண்டார். இவருடைய மூத்த மகனுக்கு 88 வயதாகிறது; கடைசிக் குமாரனுக்கு ஒன்றரை வயது. மகம்மதுக்குப் பிறந்த குழந்தைகள் மொத்தம் 32. இவர்களில் இப்போது 9 பேர் உயிருடனிருக்கிறார்கள். இப்போது இரண்டு மனைவிகள் ஜீவித்திருக்கின்றனர். இளையவளுக்கு 30 வயது. மகம்மதுடன் ஏராளமான பேரக் குழந்தைகளும், கொள்ளுப் பேரன் பேத்திகளும் இருக்கிறார்கள்.

தம் காலத்திற்குள் போப்பாலை ஏழு ஸமஸ்தானாதிபதிகள் ஆண்டிருப்பதாக மகம்மது கூறுகிறார்.

# போர் போகும் போக்கு

போரைப்பற்றிய பிரஸ்தாபமே அதிகமாகக் காணோம். இதற்கு காலநிலை பிரதிகூலமாக இருப்பது காரணமாக இருக்கலாம். இருதரப்பாரும் ராஜீய முனையில் கை வரிசையைக் காட்டுவது உசிதமெனக் கருதியது காரணமாக இருக்கலாம். சென்றவார நிகழ்ச்சிகள் இந்த அபிப்பிராயத்தையே ஊர்ஜிதம் செய்யக்கூடியனவாக இருக்கின்றன. 'ஐரோப்பாவுக்குள் புகுந்து ஜெர்மன் ராணுவத்தின் குரல்வளையைப் பிடித்து அழுத்தி அதனைக் கொல்லுவோம். இனி டங்ர்க் சம்பவங்கள் நிகழாது என்று பிரிட்டிஷ் உள்நாட்டு மந்திரியான ஹெர்பர்ட் மாரிஸன் கர்ஜிக்கிறார். '2-ம் போர் முனை முஸ்தீப்புகள் முடிந்துவிட்டன. ஏராளமான கடல், விமான நிலை படைகள் தயாராக இருக்கின்றன. அமெரிக்கப் படைகளை விமானங்களும் கப்பல்களும் பிரிட்டனில் கொண்டு வந்து குவிக்கப்படுகின்றன' என்று செய்திகள் கிடைத்திருக்கின்றன. 'விமான பலமே யுத்த முடிவுக்கு வழி காட்டும் என்ற சித்தாந்தத்துடன் பிரிட்டிஷார் இரவிலும், அமெரிக்கர் பட்டப் பகலிலும் விமானங்களைக் கொண்டு பர்லினையும் ஜெர்மனியின் கைத்தொழிற்சாலைப் பிரதேசங்களையும் தாக்கி தகர்த்து வருகின்றனர். ஆனால் ஐஸன்ஹோவர் படையெடுப்பு எப்பொழுது துவங்குமென்பது இன்னும் நிச்சயமாகத் தெரியவில்லை.

## யுத்த நிறுத்தப் பேச்சு

ஆனால் ஜெர்மனியுடன் நடத்தும் போரை நிறுத்துவதற்கான நிபந்தனைகளை பிரிட்டனும் யுனைடெட் ஸ்டேட்ஸும் ரஷ்யாவும் தனித்தனியாகத் தயார் செய்கின்றனவென்றும், இவை பின் ஒன்றாக இணைக்கப்படுமென்றும் "நியூயார்க் டைம்ஸ்" பத்திரிகை எழுதுகிறது. ஜனாதிபதி ரூஸ்வெல்டோ யு. எஸ். ஆக்டிங் வெளிநாட்டு மந்திரியான செட்டினியஸ் லண்டனில் நடைபெறும் மகாநாட்டுக்குப் போவாரென்று அறிவித்திருக்கிறார். அம் மகாநாட்டில் யுத்த நிறுத்த நிபந்தனைகளைப் பற்றி விவாதிக்கக்கூடுமென்றும், எண்ணெய்ப் பிரச்னை, விமானப் போக்குவரத்துப் பிரச்னை முதலியனபற்றி தனி மகாநாடுகள் நடக்கக்கூடுமென்றும் பத்திரிகைகள் எழுதுகின்றன.

## பின்லாந்து-ரஷ்யா ராஜிப் பேச்சு

பின்லாந்து சில நாட்களில் போரிலிருந்து விலகிவிடுமென்றும் இதனால் ஜெர்மனி நார்வேயைக்கூடக் காலி செய்ய நேரிடுமென்றும் பர்லினில் பின்லாந்துக்கும் ஜெர்மனிக்குமிடையில் ராஜிப்பேச்சு முறிந்துவிட்டதென்றும் ஜெர்மனியர் பின்லாந்திலிருந்து டீட்டிலின் ராணுவத்தை வாபீஸ் பெற மறுத்துவிட்டார்களென்றும், பல ராஜீய நிருபர்கள் சரடு விட்டனர்." ஆனால் பின்லாந்து சர்க்கார் "ரஷ்யாவுடன் சமாதானப்பேச்சு எதுவும் நடக்கவில்லை. ரஷ்யாவிடமிருந்து யுத்தநிறுத்த நிபந்தனைகளேவந்தன. அவற்றைப் பார்லிமெண்டிற்குத் தெரிவித்தோம். தற்கால ரூபத்தில் அது ஏற்கத் தகுந்ததாவென்பது பற்றி சர்க்கார் முடிவு செய்துவிட்டனர். மாஸ்கோவுக்கு தூதுகோஷ்டி எதுவும் போகவில்லை" என்று அறிவித்து இந்தச் சரடுகளை மண்டையில் அடித்துவிட்டனர். ஸ்வீடன் வழியாக ஜெனரல் டீட்டிலின் படைகளை வாபஸ் பெற பர்லின் ஸ்வீடனைக் கேட்டிருப்பதாக வெளியான தகவலை ஸ்வீடன் அங்கிய மந்திரி மறுத்து அத்தகைய கோரிக்கையை ஜெர்மனி அனுப்பவில்லை என்று தெரிவித்துவிட்டார். ரஷ்யா தனது நிபந்தனைகளை தளர்த்தமுடியாதென பயமுறுத்துகிறதாம்.

ராஜீய நிருபர்கள் தங்களது பின்லாந்து சரடின்கதி இம்மாதிரி ஆனதைக் கண்டு பல்கேரியா யுனைடெட்ஸ்டேட்ஸையும் பிரிட்டனையும் யுத்த நிறுத்த நிபந்தனைகளைத் தெரிவிக்கும்படி கேட்டிருப்பதாகவும் அது ரஷ்யாவுடன் போர் தொடர்ந்திருப்பதால் ரஷ்யாவை மத்தியஸ்தம் செய்யும்படி கேட்கக் கூடுமென்றும் தெரிவித்தனர். இதுபற்றித் தமக்கு எதுவுமே தெரியாதென யு. எஸ். அங்கிய மந்திரி தெரிவித்துவிட்டார். ஆனால் பல்கேரியா தன்னால் பிடிக்கப்பட்ட நாடுகளை நேசநாடுகள் கேட்காதிருந்தால் போரிலிருந்து விலகத் தயங்காதாம்.

துருக்கியுடன் சமாதானம் பேசுவதற்காக ஒரு பல்கேரிய புரொபஸர் வந்திருப்பதாக வதந்தி கட்டிவிடப்பட்டது. ஆனால் அந்த பல்கேரிய 'மர்ம மனிதரே' இதை மறுத்துத் தாம் சமாதானம் பேசவரவில்லை என்று தெரிவித்து விட்டார்.

## துருக்கி—நேசதேசத் தகராறு

இதற்கிடையில் நேசதேச-துருக்கித் தகராறு தலைதூக்கி வருகிறது. நேசதேசத்தார் 2-ம் பக்ஷமான தளவாடங்களையே சப்ளை செய்திருப்பதாகவும் அத்யாவசியமான தளவாடங்களில் 100 க்கு 4 வீதமே சப்ளை செய்திருப்பதாகவும் பூரண சப்ளை செய்தாலொழிய போரில் சேரமுடியாதென்றும் கூட்டாளியையும் தன்னைப் போல பிரிட்டன் பார்க்க வேண்டுமென்றும் துருக்கியா கூறுகின்றனர். பிரிட்டுரோ ஜெர்மனிக்கு எதிரா உபயோகிக்கப்படுமென்பது நிச்

சயமானுல்தான் துருக்கிக்குத் தளவாட சப்ளை செய்ய முடியு மென்று சொல்லி துருக்கிக்கு தளவாட சப்ளை செய்வதை நிறுத்திவிட்டனர். துருக்கியர் போரில் இறங்கினுலும் தங் களது தளங்களைப் பிறரிடம் ஒப்புவிக்க முடியாதென்கின் றனராம். ஜெர்மன் விமானப் படையெடுப்புக்கு பயந்து துருக்கி போரில் போதிய ஆயுத பலமின்றி சேர மறுக்கிறதாம்.

* * * *

## இத்தாலிய கடற்படை பங்கீடு

பிடிபட்ட இத்தாலிய கடற் படையில் தனக்குரிய பங்கை ஸ்டாலின் கேட்கிருர். இதனுல் இத்தாலிய யுத்தக் கப்பல்களை அதற்குக்கொடுத்து விடுவதாக ரூஸ்வெல்ட் அறிவித்திருக் கிருர்.

* * * *

## படாக்ளியோ சர்க்கார் ஏமாற்றம்

ரூஸ்வெல்ட் அறிக்கையால் படாக்ளியோ சர்க்கார் ஆச்சர் யமும் ஏமாற்றமும் அடைந்து இதன் விவரங்களைப் பூரண மாகத் தெரிவிக்கும்படி கேட் டிருக்கின்றனர். கடற்படை யால் போரில் கூட்டாளி அந் தஸ்து பெறலாமென நினைத்த படாக்ளியோ சர்க்கார் முடி வில் ஏமாற்றமுற்றனர். ஆனுல் பிரெஞ்சு வியாபாரக் கப்பல் களில் பல, பிரஞ்சு தேசியக் கமிட்டிக்கு வழங்கப்படுமென் றும் அவை பிரஞ்சுக்கொடி யுடன் போராடுமென்றும் பெரிய கப்பல்கள் போர் முடி யும் வரை நேச தேசத்தாரிடம் பிரெஞ்சுக்காரர்களால் ஒப்பு விக்கப்படுமென்றும் தெரி கிறது.

* * * *

## இத்தாலியப் போர் முனை

இத்தாலியில் எங்கும் பெரு மழையால் போர் தடைப்பட்டி ருக்கிறது. ரோந்து வேலைகளே நடைபெறுகின்றன இருதரப் பினரும் எங்கும் முன்னேற வில்லை. ஜெர்மன் எதிர்ப்பு அதிகமாக இருப்பினும் நேச தேசத்தார் கடற்கரையில் தளவாடங்களையும் உதவிப் படைகளையும் இறக்கி முன் னேறி வந்த ஜெர்மனியரை யதாஸ்தானமடையும்படி செய் தனர். ஜெர்மனியரில் 25000 பேர் சேத மடைந்தது தான் இது வரை அவர்கள் கண்ட பலன். நேசப் படையினர் சீக் கிரம் முன்னேறித் தாக்குவார் களாம். ஹிட்லரின் ரகசிய ஆயுதங்களுள் ஒன்ருன தூரத் திலிருந்து கட்டுப்பாடு செய்யக் கூடிய ஜெர்மன் சிறிய டாங்கு களை ஜெர்மனியர் உபயோகித் தும் பலிக்க வில்லை. இவற்றில் 1000 ராத்தல் வெடி மருந் தேற்றி நேசப் படைகளிடை கொண்டு வந்து நிறுத்தி இவற் றை வெடிக்கச்செய்ய கெஸல் ரிங் உத்தேசித்தார். ஆனுல் நேசப்படைக்குள் புகுமுன்பே இவற்றை நேச பீரங்கிகள் அழித்து விட்டன. ஜெர்மனியர் சிறு தாக்குதல்களையே நடத்து கின்றனர். அவற்றைக் குலைத்து டங்கிர்க் சம்பவம் நிகழாத வாறு நேசப்படைகள் செய்கின் றன.

* * * * *

## ரஷ்ய அரங்கம்

எங்கும் ஜெர்மனியர் துரத் தப்படுகின்றனர். மான்ஸ்டீன் படை பிளக்கப்பட்டு விட்டது. ஓடிஸா லவவ் ரயில் பாதைக் கும் வைடப்ஸ்கிக்கும் பாஸ் காவ் நார்வா என்ற விடங்களு க்கும் ஆபத்து ஏற்பட்டிருக் கிறது.

* * * *

## ஜப்பானிய முஸ்தீப்பு மும்முரம்

இதற்கிடையில் ஜப்பானில் யுத்த முஸ்தீப்பு மும்முரமாக நடைபெறுகிறது. டோக்கியோ வில் 4300 கெய்ஷா விடுதிகளும் (சங்கீத நர்த்தனக் கலையில் தேர்ச்சி பெற்றஜப்பானியப் பெண்களிருக்கும் விடுதிகள்) 2000 தேநீர்க் கடைகளும் 800 ஹோட்டல்களும் 9800 உல் லாச விடுதிகளும் மூடப்பட்டு விட்டன. இதனுல் 35000 பேருக்கு வேலை இல்லாமல் போகும். அவர்களுக்கு யுத்தத் தொழிற்சாலைகளில் வேலை யளிக்கப்படுமாம். மந்திரிகளும் ஞாயிற்றுக்கிழமைகளில் வேலை செய்ய வேண்டுமாம். எந்தப் பொழுது போக்கு விடுதியும் 5 என்னுக்கு மேல் கட்டணம் வாங்கக் கூடாதெனத் தடுக்கப் பட்டிருக்கிறது.

* * * *

## ஜப்பானிய கடற் படை எங்கே?

"ஜப்பானிய கடற்படை டிரக்கில் இல்லை. அது சிங்கப் பூர் போயிருக்கலாம். வங்காள விரிகுடாவில் பிரிட்டிஷாருக்கு எவ்வளவு கடற்படை யிருக்கிற தென்பது தெரியவில்லை. இலங்கையையோ அன்று இந் திய கிழக்குக் கரையோ ஜப் பானிய கடற்படை திடீரெனத் தாக்கக்கூடும். துறைமுகத்தில் கப்பல்களை இழப்பதைவிட போரில் கப்பல்களை இழப்பது உசிதம் என்று அட்மிரல் ஷிமிடா கருதுவதாக நியூயார்க் ஹெரால்டு டிரைப் யூன் பத்திரிகையின் ராணுவ நிபுணரான மேஜர் பீல்டிங் எலியட் எழுதியிருக்கிருர்.

## அர்ஜன்டைன் கலக முயற்சி விளைவு

அர்ஜன்டைனுவில் மீண்டும் ராமிரஸை ஜனுதிபதியாக்க ஜெனரல் டுகோ என்பவர் தமது படைகளுடன் கலகஞ் செய்தார். ஆனுல் ஆக்டிங் ஜனுதிபதி பாரெல் கலகக்காரர் களுடன் ராஜிபேசி அவர்களைப் பிரித்து ஜெனரல் டுகோவைக் கைதுசெய்து கலகத்தை அடக்கி விட்டார். இதன் விளைவாக அர்ஜென்டைனுவுடன் ராஜீய சம்பந்தமெதுவும் கொள்ளக் கூடாதென யு. எஸ். சர்க்கார் தங்களது தூதருக்கு உத்தர விட்டுவிட்டனர்.




20

# நல்லினி

★

வ. வேணுகோபாலன்

சூரியன் நடுவானத்தை அடைந்துகொண்டிருந்தான். கடல் அலைகளின் ஒவ்வோர் அசைவிலும், சூரியனின் கதிர்த்தொகுதிகள் தவழ்ந்து மெருகிட்டுப் பலவித வர்ணங்களை உண்டாக்கின. அவ்வித அலைகளினூடே உயிருக்குப் போராடிக்கொண்டிருந்தான் நீலன். மலைப்பாறையை நோக்கிச் செல்லும் அலைகளோடு, மிக ஆவலாய் முன்னே பாய்வான். ஆனால் அவ்வலைகள் எதிரே வரும் அலைகளின் தொகுதியால் தாக்குண்டு சிதறிப்போகும்; நீலனும் பின்னே தள்ளப்பட்டு மூச்சுத் திணறுவான்; ஆனால் மீட்டும் அவன் முன்னேறுவான், மறுபடியும் அதே அலைகள் எதிரிட்டு அவன் முயற்சியை நிலைகுலையச் செய்துவிடும். இப்படி எவ்வளவு முறை அவன் அலையினூடே அலமாந்து நீந்தமுடியும்?

## நீலன் அடைந்த துன்பம்

“தெய்வமே! என் உயிரை இங்கேயே நான் இழக்கவேண்டுமா? ஐயோ அவளை நான் ஒரு முறை காணவேண்டாமா? அந்த நல்லினி, நாககன்னியிடம் அவ்வளவு அன்பு பாராட்டினாளே! என்மீது அவளுக்கு இரக்கமுண்டாகவில்லையே! ஐயோ இந்தப் பாறையில் தொற்றிக்கொண்டு கரையேறலாமென்றால், தெய்வம் என்னைச் சோதனை செய்கின்றதே! இனி என்னால் நீந்தவே முடியாது போலிருக்கிறதே! என்ன செய்வேன்?” என்று பிதற்றியவாறே அலைகளின் மீது சாய்ந்தான். அவன் கைகள் வலிவற்றுச் சோர்ந்துவிட்டன. சூரியனின் வெம்மையோ, கனல்போல் வீசுகிறது. அலைகளோ, இருபுறமும் மோதி எழுந்து நீலனை மூழ்குவித்துத் திணற வைக்கின்றன. உயிரே போய்விடும் போல் பெருமூச்சு விட்டான். கண்கள் சிவந்து புடைகொண்டன. அலைகளின் மீதே கைகளை விரித்துச் சாய்ந்தான். உயிர்போய்விடுமே என்று அஞ்சி மீட்டும் முயன்றான். அவன் உயிரைக் காக்க வரும், கடல் அரசு போல் ஒரு பெரிய அலை வந்துகொண்டிருந்தது. நீலன் ஆவலோடு அதை எதிர்பார்த்தான். அது அருகிலே அணுகவே, ‘குபுக்’ என்று அந்த அலையை அணைந்துகொண்டான். மிகவேகமாக, நீலனையும் சேர்த்து உந்தி, அவ்வலை மலைப் பாறையிலே சென்று மோதியது. பாறையிலே தாக்குண்டாலும் நீலன் அதைப் பாராட்டவில்லை. சட்டென்று பாறையின் ஒருகுவட்டைப் பிடித்துக்கொண்டான், அவன் புத்துயிர் பெற்றான். சென்ற உயிர் திரும்பி வந்ததுபோல ஆயிற்று அவன் நிலை. பாறையில் மெள்ள ஏறிக்கொண்டு சிறிதே களைப்பாறுகிறான். கடலை ஏறிட்டு நோக்கிப் பெருமூச்செறிந்து, “ஐயோ என் தோழர்கள் என்ன ஆனார்களோ மடிந்து இறந்தார்களோ, அன்றி எங்கேனும் தப்பிப் பிழைத்தார்களோ? முடியாது! எவ்வாறு தப்பமுடியும்? மிகஅருகிலிருக்கும் இந்தப்பாறையைப் பிடிப்பதற்கு முடியாமல் நான் எவ்வளவு தவித்தேன்! இந்நிலையில் அவர்கள் எவ்வாறு பிழைக்க முடியும்? ஆம் யாவரும் கடலுக்கு—கடலிலுள்ள ஜீவராசிகளுக்கு விருந்தாகியிருப்பர் என்பது நிச்சயம். இனி நான் யாவருடைய கண்ணிலும் படாமல் இந்தத் தீவுக்குள் புகவேண்டுமே! இந்தப் பாறைகள்மீதே ஏறி வழிகண்டு போகவேண்டுமே! தெய்வமே! துணை செய்ய வேண்டும்” என்று கூறிக்கொண்டான். ஆனால் அந்த இடத்திலே அவன் வார்த்தைகளைக் கேட்பதற்கு யார் இருக்கிறார்கள்?

## தீவை அடைவது எப்படி ?

நீலன் சட்டென்று எழுந்தான். மேலே நிமிர்ந்து பார்த்தான். பாறைகளின் குவடுகளே கண்ணுக்குத் தென்பட்டன. வேறு ஒன்றும் அவனுக்குப் புலப்படவில்லை. மெள்ளப், பாறைகளில் தொற்றியவாறே மேலே சென்றான். அந்த நிர்மானுஷ்யமான பாறைகளின் முடுக்குகளிலிருந்து, சந்திடங்களிலிருந்து பறவைத் தொகுதிகள் ‘கிரீச்’சிட்டுக்கொண்டே கடலை நோக்கிப் பறந்து சென்றன. நீலன் சற்று விரைவாக ஒவ்வொரு குவடுகளையும் தொற்றித் தாவி, வளைந்து வளைந்து சென்றான். கண்கண்ட இடமெல்லாம் கை

வைத்துத் தொற்றிக்கொண்டு மேலே தாவிச்சென்றான்.

சற்று அகலமுள்ள பாறைக் குவடுகளைக் கண்டதும் அதில் சிறிதே களைப்பாறியும், யோசனை செய்தும், மீட்டும் மேலே ஏறியும் சென்றான். சாந்திமத் தீவின் பின்புறமானதால் அந்த இடம் பெரிதும் புதர்கள் நிறைந்த பாறைகளை யுடையதாயிருந்தது. 'நீலன் மிகவும் ஊக்கமுடையவனாகப் பாறைகளைக் கடந்து, உச்சியை அடைந்தான். அங்கிருந்தவாறே தீவுக்குள் போகும் வழி எவ்விதம் என்று ஆராய்ந்தான். அவனுக்கு முன்பாக ஒன்றன் பின் ஒன்றாக நெடுஞ்சுவர் போன்ற பாறைகள் நின்றமையால், தீவுக்குள் இருப்பவை ஒன்றும் அவனுக்குப் புலப்படவில்லை. அங்கும் இங்குமாகச் சென்றான். வழி ஏதும் தெரியவில்லை. எங்கும் நிசப்தமாக இருந்தது. சூரியனும் நடுவானத்தை விட்டு மேல் வானத்தே விரைந்து இறங்கிக்கொண்டிருந்தான். நாழிகை ஆகிவிட்டதை உணர்ந்த நீலன் சிறிதும் சோர்வுறாமல், ஒவ்வொரு பாறைகளையும் மெள்ளக் கடந்து சென்றான். சிறிது தூரம் சென்றதும், ஏதோ சப்தத்தைக் கேட்டுத் தயங்கி நின்றான்.

## ஓடையைப் பின்பற்ற முடிவு

'சல சல' என்று நீர் குதிகொண்டோடும் சப்தம் அது என்பதை உணர்ந்தான். "ஆம்! இது நீரோட்டத்தின் ஒலியேதான்! இந்த மலைப் பாங்கில் நீர்நிலை எங்கே உள்ளது? ஏதேனும் நீரோட்டம் இருக்கிறதா?" என்று யோசித்தவாறே ஒலி வரும் வழியே சென்றான். அவன் கண்களுக்கு ஒரு சிறு சுனை தென்பட்டது. மிகச் சிறிய சுனைதான். அதிலிருந்து 'குபுகுபு' வென்று நீரூற்றுப் பெருக்கெடுத்து ஒரு சிறு சந்து வழியே செல்கிறது. மிகக் கடுகிச் சென்றுகொண்டிருக்கும் நீர்ப்போக்கைக் கண்டு நீலன் வியப்புற்றான். 'ஆம். இந்த நீரோட்டத்தின் வழியே நாமும் சென்றால், ஏதேனும் ஒரு வழியைக் கண்டுகொள்ளலாம்,' என்று முடிவு செய்தான். உடனே, சுனைநீர் பெருக்கெடுத்துச் செல்லும், அருவியோட்டத்தின் வழியே



அவன் உடலில் நடுக்கம் உண்டாகவே பரபரப்புடன், "நல்லினி, நல்லினி!" என்றான். சட்டென்று கண்விழித்தவள் நீலனைக் கண்டதும் திகைப்பும் நாணமும் கொண்டு நோக்கினாள்.

நடந்தான். பச்சை பசேல் என்று பாறையெங்கும் பாசி பூத்திருந்தமையால், அடிமேல் அடி வைத்து மெள்ளச் சென்றான். அருவியோட்டமும், வளைந்து திரிந்து சென்றது. போகப்போக அருவியின் ஓட்டமும் அகலமாகிக்கொண்டிருந்தது. சிறிது சிறிதாக பாறைகள் பிளந்த இடங்கள் வழியே, கீழ் நோக்கிச் சென்றது அருவியோட்டம். சில இடங்களில் சிறுகியும், சிலஇடங்களில் பெருகியும், நேராகச் சென்றும், பாறைகளிலே மோதியும், பள்ளங்களிலே விழுந்தும் பலவாறாகச் சென்றது அருவியோட்டம். நீலன் சிறிதும் களைப்புறாமல் அருவியோட்டத்தின் வழியே புகுந்து இறங்கி வந்தான்.

## திகைப்புறும் காட்சி

நெடுந்தூரம் கீழே இறங்கி வந்தபின், ஒரு பாறையின்மீதே சாய்ந்தவாறு நிமிர்ந்து மேலே நோக்கினான். அப்போதுதான் அவனுக்கு தான், நெடுந்தூரம் கீழிறங்கி விட்டது நினைவுக்கு வந்தது. அருவியின் சலசலப்பும் போகப் போக மிகுதியாயிற்று. கற்கள் நீரில் உருண்டு போவதும், பாறைகளில் நீர் மோதுவதும் பலவித ஒலிகளை உண்டாக்கின. நீலன் சிறிது தூரம் சென்றவன், பாறை குடைந்திருக்கும் ஒரு சிறு சந்தைக் கண்டான். அதன் வழியேதான் அருவியும் புகுந்து

(25-ம் பக்கம்)


AFS
சாயாதான் அவனுக்கு உயிர்
தீயணைக்கும் படையினர் இந்தியாவின் அஞ்சா நெஞ்சம் படைத்த தீரர்கள். ஸிவில் தற்காப்பைச் சேர்ந்த மற்றவர்களும் அப்படித்தான். அவர்கள் எல்லோருக்கும் சாயா என்றால் உயிர். தீயணைக்கும் படையினருக்கு அக்னியோடு போராடுமுன் பலமும் தெம்பும் கொடுப்பது தேயிலைதான்.
அவனுடைய உதாரணத்தைப் பின்பற்றி கஷ்டத்தை மறக்க இந்தியத்தேயிலையை சாப்பிடுங்கள்.
மனச்சோர்வு காலங்களில்
இந்தியன் 'டீ'யை
குடியுங்கள்
இந்தியன் டீ மார்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டாரால் வெளியிடப்பட்டது
I. K. 185

# பக்தை-ஆவுடையக்காள்

★

## ஸ்ரீமதி தங்கம்மாள் பாரதி

"எத்தனை நாள் இந்த இருண்ட வாழ்க்கை வாழ்வேன்? நான் இந்த ஊரில் இருக்க வேண்டுமென்று என்ன கட்டாயம்? இந்தக் கட்டை பிறருக்கு உதவியாக ஏதேனும் செய்யுமானால் பிரயோசனமுண்டு. சாப்பிடுவது, தூங்குவது, இவைகளினால் மற்ற மனிதர்களுக்கு என்ன பிரயோசனம்? அகண்ட வெளியில் நிறைந்திருக்கும் சுயம் பிரகாசத்தை மனிதர் கண்டு உணர்வெய்த வழி தேடவேண்டும். இந்த வீடும் வாசலும் இனி எனக்கு வேண்டாம்" என்று துறவுவேடங்கொண்டு வீட்டை விட்டு வெளியேறினாள் ஆவுடை. ஒவ்வொரு ஸ்தலங்களாகத் தீர்த்த யாத்திரை செய்து கொண்டு அந்தந்த ஊரிலுள்ள சாது, எளியவர்களோடு உறவாடிக்கொண்டு தன்னாலான வரை கடவுளின் தத்துவத்தை எடுத்துப் போதித்தாள். "நான் யார்?" என்று ஆத்ம விசாரணை பண்ணும்படி மக்களுக்கு விழிப்பை உண்டு பண்ணினாள். தியாக பூமியாகிய பாரத நாட்டில் அநேகர் அவள் உபதேசத்தைப் பின் பற்றி சாதுக்களாயினர். கடைசியில் 'திருவிச நல்லூர்' என்ற க்ஷேத்திரத்தை அடைந்தாள். அவளுக்கோ ஆகாரம், நித்திரை ஒன்றிலும் கவலை கிடையாது. கிடைப்பதை உண்டு மற்றதை மற்றவர்களுக்கும் பங்கிட்டுக் கொடுத்து தியானத்தில் ஆழ்ந்து விடுவாள். அவளை அறியாமல் அவள் வாயிலிருந்து கவிதை வெள்ளம் புறப்படும். சிவபெருமானும், சரஸ்வதியும் அண்ணனும் தங்கையும் என்று புராணங்கள் கூறுகின்றன. சாதாரணமாகப் பெண்களுக்கு பிறந்தகத்திலும் முக்கியமாகப் உடன் பிறந்தானிடத்திலும் பிரியம் அதிகம் என்று சொல்வார்கள். அதேபோல் சிவபெருமான் தனது அன்பைச் செலுத்திய பெண்மணியிடம் தனது பூரண அருளையும் செலுத்தி அவளைப் பெரிய வித்வாம்ஸினியாகச் செய்தான். கலைமகள் அருளும் அப்படியே.

அதிகாலை தான் படுத்திருந்த வீட்டுத்திண்ணை வாயிலில் ஒரு யதீச்வரர் வரக் கண்டாள் ஆவுடையக்காள். அவர் சம்பாஷணை:—

யதீச்வரர்:— "பெண்ணே! காயில்லாக்காய். என்ன காய்?" சொல்வாய்.

ஆவுடை:—ஸ்வாமி! அடங்காய்; இணங்காய்; வணங்காய்; சவுங்காய். ஆகிய இந்தக் குணங்கள்தான் காயில்லாக்காய்.

யதீச்வரர்:—பூ வில்லாத பூ என்ன பூ?

ஆவுடை:—த்வைத பாவனையைத் தள்ளி, அத்வைத பாவனையாய் வரப்பட்ட ஞானமே ஞானப்பூ.

யதீ:—பழமில்லாப் பழம் எது?

ஆவுடை:—மனது விசாரணையினால் ச்ரவண மனனம் உண்டாகி கனிவு வந்து பழுப்பதே ஞானப்பழம்.

பதில் சொல்லி முடிந்ததும் யதீச்வரரைக்காண வில்லை. ஆவுடை மனதில், வியப்போடும் ஆனந்தத்தோடும் "எங்கு சென்றான் என் குரு நாதன்?" என்று ஆவலோடு நதிக்கரை சென்றாள். மனமோ ஒன்றிலும் செல்லவில்லை. பல் துலக்க மாவிலைக்கென்ன செய்வது என்று தேடும்பொழுது முன்போலவே ஆற்றில் ஒரு மாவிலைத் துண்டு மிதந்து வரவும் அதை எடுத்துப் பல் துலக்கிவிட்டுப் பிரம்மானந்தமாக ஸ்நானம் செய்யும்பொழுது ஸ்திரீகளின் கும்பலில் ஒரு கூக்குரல் கிளம்ப ஆரம்பித்தது.

ஒருத்தி:—இதேதடி! எவனோ பல் தேய்த்த எச்சில் மாவிலையை எடுத்துத் தேய்க்கிறாள்!

மற்றவள்:— பைத்தியமாயிருக்கும். பைத்தியம்போலேயும் தோன்றவில்லையே!

இன்னொருத்தி:— நன்றாயிருக்கிறது. உங்கள் பேச்சு! அந்தக் கேடு கெட்டவளுக்கு வந்த திமிரைப் பார்த்தியா? பிராமணக் குலத்தில் பிறந்து, அதிலும் விதவை ஜன்மத்தையும் எடுத்து விட்டு எச்சிலை எடுத்துத் தேய்க்க என்ன துணிச்சல் பார்த்தியா?

மற்றவள்:— இல்லை...பார்க்கப் பெரிய பக்த சிகாமணியா யிருந்துண்டு உண்டான விபூதி ருத்ராக்ஷங்களையும் போட்டுண்டு மனுஷ்யாளை ஏமாத்தத் தெரிகிற சிறுக்கிக்கு எச்சில் இலை என்பது தெரியாதோ? முன்னாலே அந்த பைராகி எச்சப் பண்ணி அந்த மாவிலையை விட்டான். அதைப் பார்த்துக் கொண்டே நின்று விட்டு அந்த மாவிலையை எடுத்துத் தேய்க்கிறாளே! என்னத்தைச் சொல்ல?

முதலில் பேசியவள்:—அவளுக்கும், அவனுக்கும் முந்தியே முதல் ஸ்நேகிதமாயிருந்திருக்கும். அதனால்தான் அந்த எச்

—18-ம் பக்கம்

தொடர் கதை



# சின்னச் சாம்பு

வ.ரா.

பாத்திரங்கள்

சம்பு சாஸ்திரிகள்-சாம்புவின் தகப்பனர்

சாவித்ரி அம்மாள்-சாம்புவின் தாயார்

சேஷன்-சாம்புவின் மாமா

நாகம்மாள்-சாம்புவின் விதவை சகோதரி

பெரிய பாதிரி-சாம்புவின் உதவியாளர்

ரோஸ்-பெரிய பாதிரியின் மகள்

சூரி-சாம்புவின் உயிர்த் தோழன்

* * * *

## அத்தியாயம் 5

சாவித்திரி அம்மாளோ, சுமங்கலி-அமங்கலி. நாகம்மாள் அசல் அமங்கலி. சம்புசாஸ்திரிகளைப் பற்றி யாதொரு சேதியும் கிடைக்கவில்லை. வீட்டிலே யார் யாரோடு 'சொரத்தாய்' பேசப் போகிருர்கள்? நாட்கள் ஒன்றன் பின் ஒன்ருய் போய்க்கொண்டிருந்தன. நாளினுல் பயன் ஏற்படாத வாழ்க்கை! நாளைப்பற்றி, யாரும் கவலைப்படாதவாழ்க்கை! இன்பமும் சாரமும் இல்லாமல் வாழ்க்கைபோய்க்கொண்டிருந்த இந்தக்காலத்தில், சின்னச்சாம்பு மெட்ரிகுலேஷன் பரீக்ஷையில் தேறினுன். சென்னை மாகாணத்திலேயே, முதல் வகுப்பில் முதலாவதாகத் தேறினுன்.

சாதாரண நாட்களில், இது ரொம்பவும் குதூகலப்பட வேண்டிய சம்பவம். ஆனுல் இப்பொழுதோ, யாருக்கும் இதனுல் குஷி ஏற்படவில்லை. சாம்புவின் படிப்பில் அக்கரைகொண்டிருந்த சாவித்திரி அம்மாளுக்கும் அம்மான் சேஷனுக்கும், அவனது வெற்றி, கவலையைத் தரும் பெரும் பிரச்னையாக ஆகிவிட்டது. இனிமேல் சாம்பு என்ன செய்வது? இத்தோடு படிப்பை நிறுத்திவிடுவதா அல்லது மேலே படிப்பதா? அவன் மேலே படிப்பதாயிருந்தால்,அதற்குப்போதிய பணம் அவர்களிடம் இல்லை. இதோடு நிறுத்துவதாயிருந்தால், கத்தரி மோழை மாதிரி ஆகிவிடுமே என்று மாமா சேஷன் வருத்தப்பட்டார்.

குடும்பத்தின் உண்மையான நிலைமை, சாம்புவுக்கு இப்பொழுதுதான் தெரிந்தது. தன் படிப்புக்காக வீட்டாருக்கும் உறவினருக்கும் தொந்திரவு கொடுக்க, அவன் இஷ்டப்படவில்லை. குடும்பத்தின் வருமானமோ, மிகக் குறைவு. செலவு மட்டும் அதிகமாகிக்கொண்டே போயிற்று. இதன் காரணம் என்ன என்ற ஆராய்ச்சியில், சின்னச் சாம்பு புகவில்லை. குடும்பச் செலவுக்குக் கண்டு மீதமாகும்படியான சம்பாத்தியத்தை, தான் நாடவேண்டும் என்றும் மேல் படிப்பு ஆசையை, அடியோடே இல்லாவிட்டாலும், தற்காலிகமாவேனும் விட்டுவிட வேண்டும் என்றும் சின்னச் சாம்பு தீர்மானம் கொண்டான்.

பெரிய பாதிரியார் இது விஷயத்தில் தனக்கு எவ்வளவு வரையில் உதவி செய்யமுடியும் என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்பது அவனது ஆசை. பெரிய பாதிரியாரின் சிபார்சு இருந்தால், கணிசமான உத்தியோகம் தனக்குக் கிடைக்கலாம் என்பது அவனது நம்பிக்கை. மாமா சேஷன் வந்திருந்த சமயத்தில், இதை அவரிடம் சாம்பு சொன்னுன். சாம்பு இங்கிலிஷ் படித்து, கையும் பையும் நிறைய அவன்



சம்பாதித்து, அதனால் தங்கள் வர்க்கத்தாரின் பெயர் நாட்டில் அடிபட வேண்டும் என்ற ஆசை யால் தூண்டப்பட்டு, சாம்பு இங்கிலீஷ் படிக்க வேண்டும் என்று மாமா சேஷன் ஆதியிலே யோசனை சொன்னார். அதற்கு இடஞ்சல் ஏற்பட்டு, அது பிஞ் சிலே பழுத்து வெம்பிப் போன யோசனையாகப் போய்விடும் போலிருக்கிறதே என்று அம் மான் மிகவும் வருந்தினர்.

சாம்புவின் யோசனையைக் கேட்டு, அதை அவர் மெல்லவும் முடியவில்லை; ஒன்றும் சொல் லவும் முடியவில்லை. 'ஈச்வரோ ரக்ஷது' (கடவுள் காப்பாற்று வாராக!) என்று சொல்லி, அவர் பெருமூச்சு விட்டார். சாம்பு, வேலைக்குப் போகும் விஷயத்தில் சாவித்திரி அம்மாளுக்கு சம்மதம் தான். அந்தக் காலத்திலே, மாதம் பத்து ரூபாய் ரொக்கப் பணம் சம்பளமாக கிடைத்தால், அதுவே, பெரிய பொக்கிஷமாக கருதப்பட்டது. கிராமத்திலே, மாதம் பத்து ரூபாயை எப்படி செலவழிக்கிறது என்பது தான் பெரிய பிரச்னையாகும். அப் போதிருந்தவர்களின் ஆசைகள் அப்பொழுது தான் பெருக ஆரம் பித்த சமயம் அது! மேலும், குடும்பத்துக்கு வேண்டிய பொருள்கள் யாவும் படுமலிவாக விற்ற காலம் அது. எல்லாம் மலிவு; ஆனால் பணம் மட்டும் கிராக்கி.

இந்த சமயத்தில், சாம்புவின் இங்கிலீஷ் படிப்பு மூலமாக, ரொக்கப் பணம் மட்டும் கொஞ் சம் அதிகமாக கிடைக்குமானால், பெரிய கிராமம் ஒன்றையே விலைக்கு வாங்கி விடலாமே என்று மாமா சேஷன் மனக் கோட்டை கட்டியிருந்தார் என் பது உண்மை தான். அந்தக் கோட்டை இடிந்து சரிந்து விழு வதைக் காண, அவர் மனம் பொறுக்கவில்லை. என்றாலும், பெரிய பாதிரியாரின் உதவியைக் கொண்டு, வேலையொன்றைச் சம் பாதித்துக் கொள்ள வேண்டும் என்று சாம்பு, முடிவுக்கு வந்த தற்கு இணங்க, அவன் ஒரு நாள் மத்தியானம் புலிப்பட்டணத் துக்கு, பாதிரியாரை பார்க்கப் போனான்.

அவன் போன சமயத்தில், பாதிரியார் பங்களாவில் இல்லை. ரோஸ்மட்டும் பங்களாவின் வாசல் படியில் நின்று கொண்டு நாய்க் குட்டியொன்றை பிடித்து கொஞ்சிவிளையாடிக் கொண்டி ருந்தாள். சாம்பு வந்ததைப் பார்க்காதது போல, அவள் நாயோடு ஏதேதோ பேசிக் கொண்டிருந்தாள். 'குட் மார் னிங்! ரோஸ்' என்றான் சாம்பு. 'ஹலோ! குட் மார்னிங்' என் றாள் ரோஸ். பரீக்ஷையில் சாம்பு தேறியதை அவள் பாராட்டி னாள். என்னை விட்டுப் பிரிந்து நீ சீக்கிரம் சென்னைக்கு மேல் படி ப்புக்காக போய் விடுவாய். நான் இனிமேல் இங்கே ஒண்டியாகத் தானே இருக்க வேணும்' என்று அவள் சிரித்துக் கொண்டே சொன்னாள்.

மேலே படிக்க தனக்கு வக்கு இல்லை என்று இவளுக்குத் தெரி யாமல் ஏதோ பேசிக் கொண்டி ருக்கிறாளே என்று அவன் வருத் தப்பட்டான். மேலும் தான் பிரிந்து போனால் அவள் ஒண்டி யாக இருக்க நேருமே என்று அவள் சொன்னது வெறும் குறும்புத்தனம் என்று கொண்டு அவன் கோபப்பட் டான்.

'என்னிடத்தில் உனக்கு பிர மாத அக்கரையோ!' என்று சாம்பு படபடத்துக் கேட்டான். ரோஸ் வாய் திறக்கவில்லை. 'கிண் டலை ஜரித்துக் கொள்வதற்கு மௌனம் தான் சிறந்த சாதனம் என்று சாம்பு மீண்டும் ஆத்திரத் தோடு பேசினான்.

'சாம்பு! மாகாணத்திலேயே முதலிலே நீ பரீக்ஷையில் தேறி னாலும், நீ பையன் பையன் தான். பெரிய ஆண்பிள்ளை மாதிரி ஏன் படாடோபமாகப் பேசுகிறாய்?' என்று ரோஸ் நிதானமாகப் பேசினாள். 'நீ மாத்திரம் என்ன செய்கிறாய்? நீ சின்னஞ் சிறுமி என்பதை மறந்து பெரிய பெண் பிள்ளை மாதிரி எனக்கு உபதே சம் செய்யத் துவக்கி விட்டாய்' என்று சாம்பு சொற்களை விருடி யில் உலுக்கி உதறி விட்டான்.

இது சொன்ன பிறகும் கூட, அவன் ஆத்திரம் தணியவில்லை. 'நீயோ, செல்வாக்குப் படைத்த பாதிரியாரின் அருமை மகள். நானோ, ஏழை சாஸ்திரிகளின் வீட்டு திக்கற்ற பையன். உன் நிறமோ, உலகத்திலே மிக்க செல்வாக்கு படைத்த வெள்ளை

(24-ம் பக்கம்)




# நாடகம் II

[காப்பிரைட்]

★

*சென்ற வாரத்தில் ஸ்ரீமான் ஸத்தியமூர்த்தி நாடகத்தைப்பற்றி எழுதிய முதல் கடிதம் பிரசுரமாயிற்று. அதே விஷயமாக அவர் எழுதிய இரண்டாவது கடிதம் இவ்விதழில் தோன்றுகிறது. நாடகசாலைகள் அமையவேண்டிய முறை, நடிப்பின் விசேஷம், நாடகபாத்திரங்களின் உடை முதலியவைபற்றி இக்கடிதத்தில் அவர் பிரஸ்தாபித்திருக்கிறார். நாடகங்களில் ஸ்திரீகள் சேர்ந்து நடிக்கலாமா? நடிக்கவேண்டுமானால் எந்த நிலைமையில்? இவைபற்றியும் அவர் தமது அபிப்ராயத்தை வெளியிட்டிருக்கிறார். 1941-ம் வருஷம் ஜூன் மாதம் 15-ந் தேதி அவர் எழுதிய ஆங்கிலக் கடிதத்தின் மொழிபெயர்ப்பு வருமாறு:—*

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

நாடகத்தின் சரித்திர பூர்வமான அம்சம் குறித்தும், தற்கால இந்திய நாடகம் பற்றியும் சென்ற கடிதத்தில் உனக்கு எழுதியிருந்தேன். அதில் சில நாடக ஆசிரியர்களைப் பற்றியும் பிரஸ்தாபித்திருந்தேன். இந்திய நாடக மறு மலர்ச்சிக்காக டாக்டர் ரவீந்திர நாத தாகூர் செய்திருக்கும் மகத்தான சேவையை இங்கு குறிப்பிட விரும்புகிறேன். ரவீந்திரர் பெரிய கவி; நாடகாசிரியர்; அவரே பிரபல நடிகர்கூட. கல்விக்கும், கலா நாகரிகத்துக்கும் உறைவிடமாக விளங்கும் சாந்திநிகேதனத்தின் ஸ்தாபகரும் அவர்தான். தற்கால வங்காளி நாடகம் சீரான முறையில் அபிவிருத்தியடைவதற்காக அவர் செய்திருக்கும் தொண்டு கொஞ்சநஞ்சமல்ல.

நாடகத்தை மேடைமீது நடிப்பதன் மூலமே நன்கு சித்தரித்துக் காட்ட முடியும் என்பது உனக்குத்தெரிந்த விஷயம். நடிப்பு தவிர, மேடை, காட்சிகள், விளக்குகளைப் பொருத்தும் வேலை, உடை, வேஷம், நாடகசாலையின் அமைப்பு, பின்னணிச் சங்கீதம் முதலிய எல்லாம் ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் அநேகமாகச் செவ்வையான நிலைமையில் வைக்கப்பட்டிருக்கின்றன. இவைகளெல்லாம் யுத்தகோரத்திலிருந்து தப்பி, மிஞ்சி நிலைபெற்றிருக்கும் என நம்புகிறேன். இந்தியாவில் இவற்றை நாம் பூர்த்தி செய்யும்படியாக அதிகமான வேலைகள் இருக்கின்றன.

கல்கத்தா, பம்பாய் ஆகிய இடங்களில் நவீன முறையில் சில தியேட்டர்கள் இருக்கின்றன. மற்றபடி நமது இதர தியேட்டர்களெல்லாம் போதிய இடவசதியுள்ள பிரதேசத்தில் இல்லை; காற்றோட்ட சாதனத்துடன் கூடியதாகவும் கிடையாது. தியேட்டர்களுக்குள்ளே இடவசதி ஏற்பாடுகள் திருப்திகரமாக இல்லை. அவ்விடங்களில் சுகாதாரத்துக்காகச் செய்யப்பட்டிருக்கும் ஏற்பாடுகளோ நவீன முறைப்படி இல்லை. ஜோடனைகள் எல்லாம் அநேகமாகக் கலை அழகுடன் அமைவதில்லை. நாடகங்களுக்கு உகந்த முறையில் அவை உதவியாகவும் இருப்பதில்லை. பார்க்கப்போனால் அந்த ஜோடனைகள் எல்லாம் உண்மையான முறையில் நாடகத்தைச் சித்தரித்துக் காட்டவொட்டாமல் தடையாகவும் இருக்கின்றன. நமது நடிகர், நடிகைகள் தரித்துக்கொள்ளும் உடையைப்பற்றியோ சொல்லவே வேண்டியதில்லை. இவ்விஷயத்தில் சரியான முறையைப் பின்பற்றியோ, சரித்திரத்தை ஒட்டியோ கவனம் செலுத்தப்பட

வில்லை. கண்ணியமான முறையில் உடுப்பதும் கிடையாது. நாடகங்களைச்செவ்வனே நடித்துக்காட்டுவதற்கு இவைகளெல்லாம் அத்தியாவசியமானவை என்று சொல்லாவிட்டாலும் அவைரொம்ப முக்கியமான விஷயங்கள் என்பதை நீ ஒப்புக்கொள்ளவேண்டும். நாடகத்தில், பின்னுல் ஜோடனையுள்ள அமைப்பு மிக முக்கியமானது நாடகத்தைப்பற்றிய உணர்ச்சியும், பிரமையும் பார்ப்பவர்கள் மனத்தில் குடிகொள்ளும்படிச் செய்ய வேண்டுமானுல், நடிக, நடிகைகள் திறம்படநடிப்பதுமட்டுமின்றி, ஜோடனைகளையும் உதவியாக இருக்கும்படி அமைக்க வேண்டும். நடிக, நடிகைகள் சமயத்துக்கு ஏற்றபடி நல்ல மாதிரியில் உடுப்புகள் தரிக்க வேண்டும். சரித்திர சம்பந்தமாகவுள்ள நாடகங்களை நடிக்க நேருவதாக வைத்துக்கொள்வோம். எந்தக் காலத்தில் அந்தச் சரித்திர சம்பவம் நிகழ்ந்தது என்பதை நன்கு பரிசீலனை செய்ய வேண்டும். அத்தோடு அந்தக் காலத்திலே எந்த விதமான உடுப்பு உபயோகத்தில் இருந்தது என்பதையும் கவனிக்க வேண்டும். இதை அனுசரித்து நாடகப் பாத்திரங்களுக்கு வேஷம் அமைத்து உடுப்புகளைத் தரிக்கும்படிச் செய்ய வேண்டும். புராண சம்பந்தமான நாடகம் நடிக்க வேண்டுமானுல், ரவி வர்மா தமது படங்களை வர்ணம் திட்டுகையில் கவனித்துச் செய்ததைப்போல நாம் ஏதாவது ஒரு சம்பிரதாயத்தை ஒட்டிச் செய்ய வேண்டும். தற்கால இந்திய நாடகங்களைப்பற்றியமட்டும் வேஷம் புனைவதற்கு உடைபற்றிய வேலை சுலபம். ஆயினும் இவ்விஷயத்திலும் போதிய கவனம் செலுத்தப்படவில்லை. நாடகமேடை மீது தீபங்களை அமைப்பது ரொம்ப முக்கியான அம்சம். நாடகசாலையில்,மேடைமீது மட்டும் வெளிச்சம் தெரியும்படிச் செய்து, சபையில் விளக்கில்லாமல் செய்தால், நடிப்பின் திறமையை உயர்வாகக் காட்டலாம். இது சுலபமானதொரு யுக்தி. நமது தியேட்டர்கள் பலவற்றில் இம்முறை அனுஷ்டிக்கப்படவில்லை. மேடைமீதுள்ள விளக்குகளைத் திறமையான முறையில் எரியவிட்டோ அணையும்படிச்செய்தோ நாடக கட்டங்களுக்கு ஏற்ப ஏற்பாடுகளைச் செய்தால், நாடகத்தில் மிகவும் அபூர்வமாக சோபை ஏற்படும்படிச் செய்யலாம்; இது பிரமிப்புத் தட்டும்வண்ணமும் இருக்கும்.

பொருத்தமான நடிக நடிகைகளைப் பொறுக்குவது சுலபமான காரியமல்ல. நான் ஒரு நடிகனுக இருந்திருக்கிறேன். எனவே இதிலுள்ள கஷ்டத்தைப் போதியபடி நான் உணர்ந்திருக்கிறேன். அத்தோடு நடிப்பிலுள்ள கவர்ச்சி மிகுந்த தன்மையையும் அறிவேன். நீ கூட உன் பள்ளிக்கூட நாடகத்தில் நடித்திருக்கிருய். ஸெயிண்டு தாமஸ் கான்வெண்டில் நடந்த நாடகத்தில் நாட்டுப்புறத்து ஸ்பானியப் பெண் வேஷத்தில் உன்னை நான் பார்த்திருப்பதாக ஞாபகம் எனக்கு. முதலில் உன்னை எனக்கு அடையாளமே தெரியவில்லை. பிறகுதான் உன்அம்மா எனக்குச் சொன்னுள். நடிப்பது ரொம்ப சிரமமான காரியம்; ஏனெனில், உன்னுடைய சொந்த உணர்ச்சிகளையெல்லாம் அடக்கிக்கொண்டு நாடகபாத்திரத்துக்குள்ள உணர்ச்சியைப் பெருக்கிக்கொள்ள வேண்டியிருக்கிறது. ஆனுல், கட்டுக்கடங்காத நிலைமையிலும் போய்விடக்கூடாது. இயற்கையைத் தத்ரூபமாகப் படம் பிடித்துக் காட்டுவதல்ல நடிப்பு. இயற்கையுடன் கலாரஸ உணர்ச்சியும் கூடியிருக்கவேண்டும். சபையில் இருப்பவர்கள் நீ ஏற்றிருக்கும் பாத்திரம் உனக்குப் பொருத்தம் என்று நம்பிக்கைகொள்ளும்படி இருக்கவேண்டும். இதற்கு மிகவும் நல்ல பயிற்சி இருக்க வேண்டும்; அதிகமாகக் கவனம் செலுத்துவதும் அவசியம். இன்று நம்நாட்டில் இந்த விஷயம் சீரான முறையில் கவனிக்கப்படவில்லை. நம் நாட்டிலே நடிப்பதற்குப் பயிற்சி அளிக்க நல்ல பாடசாலைகள் ஏற்படவேண்டும்.

இதைப்பற்றிச் சொல்லும்போது இன்னெரு விஷயம் எனக்குத் தோன்றுகிறது. ஸ்திரீகள் வேஷத்தைப் புருஷர்கள் ஏற்றுக்கொள்கிருர்கள். புருஷர்கள் வேஷத்தைப் பெண்கள் ஏற்றுக்கொள்கின்றனர். இதில் விலக்குகள் உண்டு என்றுலும் இது இயற்கைக்கு விரோதமாயிருப்பதால் இம்முறை மறையவேண்டும். புருஷர்கள் புருஷர்கள் பாகத்தை ஏற்று நடிக்கவேண்டும். ஸ்திரீகளும் ஸ்திரீகளின் பாகத்தை ஏற்றுக்கொள்ளவேண்டும். சமூகத்தில் செல்வாக்கும், மதிப்பும் உள்ள ஸ்திரீகள் நடிப்பைத் தொழிலாகக் கொள்ளலாமா? இந்தக் காலத்தில் அமெச்சூர் நாடகங்களில் விசேஷமான சந்தர்ப்பங்களில் ஸ்திரீகள் நடிக்கத்தான் நடிக்கின்றனர். அதில் அவர்களுக்குத் தனிச் சிறப்பும் கிடைக்கிறது. நம் நாட்டில் கண்ணியமான ஸ்திரீகளும் நடிப்பைத் தொழிலாகக்கொண்டு முன்னுக்கு வரும் காலம் வரும் என்று நான் நம்புகிறேன். ஆனுல், இதற்கிடையே அவர்கள் தன்னம்பிக்கையோடு தங்களைச் செவ்வையாகக்

—20-ம் பக்கம்

'சுதேசமித்திரன்' வாரப்பதிப்பு

## சந்தா விவரம்

(முன்னதாகக் கட்டவேண்டும்)

இந்தியா, இலங்கை

| | ரூ. | அ. | | ரூ. | அ. |
|---|---|---|---|---|---|
| 1 வருடம் | 9 | 12 | 3 மாதம் | 2 | 12 |
| 6 மாதம் | 5 | 0 | தனிப்பிரதி | 0 | 3 |

வெளிநாடு ரூ. 19—8.

3 மாதத்திற்கு குறைந்து சந்தா ஒப்புக்கொள்ளப் படமாட்டாது.

# ஸ்ரீ அருணாசலக் கவியின் பாட்டுக்கள்

ஸங்கீத ரத்நாகர அரியக்குடி ஸ்ரீ ராமாநுஜய்யங்கார் ஸ்வரப்படுத்தியது

I

பல்லவி

இந்த விபீஷணன் மீது-நடக்க இத்தனை யோசனை ஏது

அனுபல்லவி

அந்த இலங்கையிலே அறிந்தேன் இவனை
[முன்னே
சந்தேகம் இல்லை ஸ்வாமி தாஸன் அனுமான்
[சொன்னேன் (இந்த)



சரணங்கள்

1. சொல்லும் புராண வேத சாத்திரம் இவன்
செய்வது தேவதா தோத்திரம் பல
கல்வி கேள்விக்கெல்லாம் பாத்திரம் கள்ளம்
கபடறியான் அணு மாத்திரம் இது
அல்லாமல் இவன் வீட்டில் அடுத்த போதில்
[அநேகம்
நல்ல நல்ல சதனம் நான் கண்டேன்
[அனுபோகம் (இந்த)

2. ஊத்தை ஆனசுள்ளும் கள்ளும் இவன்
உண்கிறான் என்பதைத் தள்ளும் கண்டால்
ஏற்றவன் என்று நீர் கொள்ளும் நல்ல
இங்கிதவான் எவர்க்குள்ளும் இவன்
நேற்று ராவணன் என்மேல் நீட்டிய கத்தி வெட்டைத்
தீர்த்து விட்டே எனக்குச் செய்தான் பிராணப் பிரதிட்டை (இந்த)

3. மூவர்க்கும் கூடாத வெற்றிகூட
முடிப்பதல்லோ உந்தன் சத்தி சிறு
கூவத்தைக் கண்டு கடல் ஒற்றிப்போன
கொள்கை போல் ஆச்சே இந்தப்பெற்றி சாமி
தேவிக்கும் பெண்ணைக் கொண்டு தேற்றச் சொல்லி அகன்றான்
ஆவத்தையின்லே வந்தபயம் அப்பன் என்றான் (இந்த)

II

ராகம்: கமாஸ் தாளம்: ஆதி

ஆ: ஸ மகம பதநிஸ் — அ: ஸ்நி தப மகரிஸ.

**(28-வது கர்த்தா (ஹரிகாம்போஜி) வில் ஜன்யம்.)**

*விசேஷமாக 'மகஸா' என்ற பிரயோகமும் உண்டு.*

### பல்லவி

; , ரீ ஸ்நி தா பா தப மகமா | ; , தப மகம | பா, த தா ஸ்நி நிப ‖ ; , ஸா மகப பா, த நிஸ் நித |
இந் . த வி பீ . . ஷ . ணன் | பீ . து . ந | ம . க்கு . . . . ‖ இத்தனை . யோ . ச . னை . |
நிப தநி நிஸ்ரிநி | ரிஸ் நித பமபத ‖ நிஸ்நி —
. . ஏ . து . . | . . . . . . . . ‖ . . . — (இந்த)

### அனுபல்லவி

*
; , பநி தநீ ஸா ஸா ஸ்நி ரிஸ் ஸா | ; நித நீ ரிஸ் | ஸ்ஸ் நித பா பா பா தநி ‖
அந் . த இலங்கை யி . லே . . | அறிந்தேன் இ . | வ . னை . . முன்னே . . ‖
தமா — தப மகம பா பதப தநிஸ் | ரீ, ஸா, ஸ்ஸ் | நித பம கம பத ‖ நிஸ்நி —
. . — சந் . தே . கம் இல்லை . . ஸ்வா . மி | தாஸன் அ . | னு . மான் . சொன் . னேன். ‖ . . . — (இந்த)

### சரணம்

; , — ஸ்ஸ் நிதா தா தா தா, ஸ் நித | நிப பா தா நீ | ஸ்ஸ் நித பா பா ‖
சொல் . லும் புராண வே . த . | . . சாஸ் . தி | ர ம் . . . இவன் . ‖
; , — நீத பா பா, நிதா பம மகா, மா | ; ஸம மக மா | மா தப மா பா பா ‖
செய்வது தே . . வ . . . தா | ஸ்தோ . . . த்தி | ரம் . . . ப ல ‖

; , — ப நி த நீஸா ஸா ஸ்நி* ரிஸ் ஸா | ; ஸ்ஸ் நித நீரிஸ் | ஸ்ஸ் நித பா பா பா ‖
கல் . வி கேள் . விக் கெல் . லாம் . . | பா . . . த் தி . . | ர ம் . . . . கள்ளம் ‖
; — கமா பபத பதநிதா, பா மக மா | ; மக ஸா மக | மா தப மா பா பா ‖
கப ட றி . யான் . . . . அ . னு | மா . . த் தி . | ரம் . . . இது — ‖

### மத்யம காலம்

ஸம கம பப பம மநித நிஸ் ஸ்ஸ்ஸ் | ரீஸ் ஸ்நி தபத | ரிஸ் நித பா கம பத ‖
அல்லா . மல் இவன் வீட்டில் அடுத்த போதிலநேகம் | நல்ல நல்ல சகுனம் | நான் . கண் . டேன் அனுபோ . ‖
நிஸ்நி —
கம் . . — (இந்த)

* இந்த அடையாளம் காகலி நிஷாதம்.



# காலைக் கண்காட்சி

## ஜப்பானியர் முறை

ஹாங்காங் வசப்பட்டவுடன் உலகமே கண்டும், கேட்டுமறியாத ஒரு கொடுமை முறையை ஜப்பானியர் கையாள ஆரம்பித்தனர். ஒவ்வொரு நாளும் காலையில் ஆதரவற்ற 400 சீனர்களை கிங்ஸ் பார்க்'குக்கு கொண்டுவந்து ஜப்பானிய உத்யோகஸ்தர்கள் வாள் கொண்டு தலைகளை வீசிக் கொன்றனர். உத்யோகஸ்தர்களுக்கு இது நல்ல பயிற்சியாம்! பார்க்கும் படைகளுக்கு ஒரு வேடிக்கையாம்! இந்த மிருகத்தனம், ரத்த வெறி, ஈவிரக்கமற்ற கொடூரம் ஜப்பானில அபூர்வமல்ல. சர்வ சாதாரணமானது. ஜப்பானியன் வேறு நாட்டாரைக் கொல்வது கொடுமையல்ல என்று எண்ணுகிறான். ஏனெனில் அவன் மதிப்பில் மற்றையோரெல்லாம் அவனுக்குக் கீழானவர்களே.

அப்படிப்பட்ட நாட்டை இந்தியர் என்ன செய்யவேண்டும்? ஒரே ஒரு பதில் தானுண்டு. ஜப்பானியர்களை அழிக்கவேண்டும். கொடுஞ் செயல் புரியும் மிருக சாதியை அடியோடு அறுக்கவேண்டும். நிபந்தனையற்ற சரணாகதியடையும்படி செய்யவேண்டும். அதற்கு குறைவாக எது செய்தாலும் போதாது.



# பிரபந்த நந்தவனம்

II

## இன்றும் வாடாத மலர்கள்

★

பி. ஸ்ரீ

சமீபத்தில் ஒரு நாள் சூரியோதயத்திற்கு முன்பே ஒரு கையில் காப்பிக் கிண்ணமும் ஒரு கையில் காலைப் பத்திரிகையுமாக "எதில் அதிக ருசி, அதிக வெறி, இருக்கிறது?" என்று கண்டுபிடிப்பது போல் உட்கார்ந்திருந்தேன். அப்போது, இரண்டு நண்பர்கள் அதற்கும் முன்பே சூடான காப்பியை உள்ளே தள்ளிவிட்டுச் சுடச் சுடப் பத்திரிகைச் செய்திகளையும் பருகிய வண்ணமாய் என்னை நோக்கி வந்தார்கள்.

ஒருவர் "இந்து மதத்திற்கு ஆபத்து!" என்று பயமுறுத்தி, என் கவனத்தைத் தன் பக்கமாய் இழுக்கப் பார்த்தார். மற்றவரோ, "இந்து மதத்தை அசைக்கமுடியாது; திருவாளர் அம்பேத்கார் மிரட்டலுக்கு ஸ்ரீமான் முன்ஷி பதில்" என்று கூச்சலிட்டுப் பத்திரிகையிலிருந்து மட மட வென்று வாசிக்கத் தொடங்கினார்.

நண்பர்களுடைய பரபரப்பிற்குக் காரணமான விஷயம் விளங்கி விட்டது. டாக்டர் அம்பேத்கார் ஹரிஜன்களை அன்னிய மதம் தழுவும்படி வற்புறுத்தி வருகிறார் அல்லவா? அதற்கு ஒரு கூட்டத்திலே பதில் சொல்லும்போது மாஜி காங்கிரஸ் மந்திரியான ஸ்ரீ கே. எம். முன்ஷி, "இந்து மதம் வலிமை வாய்ந்த அஸ்திவாரம் உடையது; அரசியல்-கிளர்ச்சிகளால் அசையாது!" என்றார். எனினும் அப்படி நினைத்துக் கொண்டு நாம் சும்மா இருக்கக் கூடாது என்று, "நமது இரத்தமும் ஹரிஜனங்களின் இரத்தமும் ஒன்றுதான். எனவே, சமத்வ உணர்ச்சியைத் துரிதமாகப் பரப்பி, நமது சமூகமும் மதமும் புத்துயிர் பெறும்படிச் செய்ய வேண்டும்; இது நமது கடமை" என்று நமக்கும் எச்சரிக்கை செய்தார்.

"அவசியமான எச்சரிக்கைதான்" என்றேன் நான். "ஹரிஜனங்களும் இந்து சமுதாயத்தைச் சேர்ந்தவர்களே—என்பதை உணர்ந்துகொண்டு இந்து மதத்தின் அஸ்திவாரத்தை இன்னும் பலப்படுத்திக் கொள்ள வேண்டும். அப்படியானால்தான் நமது மதம் அசைக்க முடியாதபடி புத்துயிர் பெறும்; சமுதாயமும் புது வாழ்வு பெற்று விளங்கும். தமிழ்நாடு சம்பந்தப்பட்ட வரையில் ஆழ்வார்களுடைய பிரபந்தங்கள் நமக்கு நல்ல வழிகாட்டுகின்றன!" என்று நண்பர்களிடம் தெரிவித்தேன்.

முதல் நண்பர்:—ஆழ்வார்கள் எப்படி வழிகாட்ட முடியும்? சமுதாயம் தான், ஆழ்வார்கள் பாடியிருக்கும் கோவில்களைச் சேர்ந்த தெப்பக்குளம்போல் தேங்கிக் கிடக்கிறதே!

நான்:—இது ஆழ்வார்களின் குற்றமா? அவர்கள் காலத்திலே சோலையும் நந்தவனமுமாயிருந்தது கோவில். குளமும் அழகான தாமரைக் குளமாயிருந்திருக்கவேண்டும். மதுரைக் கோவிலிலுள்ள குளம் இன்றும் "பொற்றாமரைத் தடாகம்" என்றே பெயர் பெறுகிறதல்லவா? என்ன அழகான பெயர்! ஆழ்வார்கள் முதலான பக்த மணிகள் காட்டும் வழியும் அழகான வழிதான்; சரியான வழிதான்.

இரண்டாவது நண்பர்:—கோவில்கள் பிற்காலத்திலேதான் பெரிய பெரிய கட்டடங்கள் ஆகியிருக்க வேணும்—என்று நானும் நினைத்ததுண்டு. ஆனால் வசதியான சோலைகளில் ஆலயங்களை அமைத்து, நம் முன்னோர் வழிபாடு செய்து வந்தார்கள் என்பது எனக்குப் புதிய செய்திதான்.

நான்:—தாங்கள் பிரபந்தம் பார்த்திருந்தால், எளிதாகத்

தெரிந்துகொண்டிருப்பீர்கள். "திருவரங்கம் பெரிய கோவில்" என்று வைஷ்ணவர்கள் சொல்லுகிருர்களே, அந்தப் பெரிய கோவில் ஆதியில் எப்படியிருந்தது, தெரியுமா?

"வண்டினம் முரலும் சோலை;
மயிலினம் ஆலும் சோலை;
கொண்டல்மீ(து) அணவும் சோலை;
குயிலினம் கூவும் சோலை;
அண்டர்கோன் அமரும் சோலை"

[ஆலும்-ஆடும். கொண்டல்-மேகம். அணவும்-அணுகும். அண்டர்கோன்-தேவ தேவனுகிய ஸ்ரீரங்கநாதன்.]

என்று அந்தக் கோவிலைத் தொண்டரடிப்பொடியாழ்வார் பாடியிருக்கிருர். அப்படிப்பட்ட சோலையிலே—அந்த இயற்கை அழகுகளுக்கிடையே—ஸ்ரீரங்கநாதனுடைய தெய்விக அழகை ஆழ்வார்களும் பிறரும் அக்காலத்திலே தரிசித்துப் புத்துயிர் பெற்றிருக்க வேண்டும்.



முதல் நண்பர்:—அந்தச் சோலைகள் தான் அழிந்து போய் விட்டனவே! பிற்காலக் கட்டடங்களும் இக்காலத்தில் அழகழிந்து அசுத்தமாகிக் கடவுளுக்கும் சிறைச்சாலைகளாகி வருகின்றனவே! அப்படியே பிரபந்த நந்தவனமும் ஒரு காலத்தில் ஆறுதல் அளிக்கக்கூடிய பூஞ்சோலையாக இருந்திருக்கலாம். ஆனுல், இன்று நாம் வேறு தோட்டமும் பங்களாவும் காலத்துக்கு ஏற்றபடி அமைத்துக்கொள்ள வேண்டியதுதானே? பழைய வழி நமக்குச் சரிப்படுமா?

இரண்டாவது நண்பர்:—எனக்கும் புது வழி அவசியம் என்றுதான் தோன்றுகிறது. ஆனுல், "நமது மதத்திற்கு ஆபத்து வந்தாலும் வரட்டும்; நாம் மேல்நாட்டாருடைய வாழ்க்கைத் திட்டத்தையே பின்பற்ற வேணும்"—என்று நான் சொல்லத் தயாராக இல்லை.

முதல் நண்பர்:—மதத்திற்கு ஆபத்து வந்தாலும் மனிதரைக் காப்பாற்ற வேணும்!-என்றுதான் நான் சொல்லுகிறேன். 'தன்னுயிர்போல் மன்னுயிரைப் போற்றவேணும் என்ற ஒரு கொள்கை போதாதா, ஹரிஜனங்களுக்கும் நாம் கை கொடுத்து உதவவேணும் என்பதற்கு? கடவுளும் மதமும் எதற்காக?

இரண்டாவது நண்பர்:—தன்னுயிர் போல் மன்னுயிரைப் போற்றுவதற்கே கடவுள்-நம்பிக்கையும் துணைசெய்யும் என்பது என் அபிப்பிராயம். "கடவுள் அன்பு மயம்; நாமும் அன்பு மயமானுல்தான் அன்புக் கடவுளை அடையமுடியும்" என்ற கொள்கை சமுதாய சேவைக்கு எவ்வளவு அவசியமானது!

நான்:—நல்லது; அப்படியே ஆழ்வார்களும் உபதேசிக்கிருர்கள். "தன்னுயிரைக் காட்டினுலும்; மன்னுயிரையே போற்ற வேண்டும்!" என்று கூட அவர்கள் உபதேசஞ் செய்கிருர்கள். அதுவே அன்பு வழி; பேரின்ப வழி; கடவுள்-வழி—என்கிருர்கள்.

"நான் நரகம் அடைந்தாலும் பிறர் க்ஷேமம் அடைவதே எனக்குப் பரம திருப்தி!" என்று ராமானுஜர் ஒரு சமயம் சொன்னுர். அந்தக் கதையை நான் உங்களுக்கு வேருெரு சமயம் சொல்லுகிறேன். அப்படி ராமானுஜரையும் நினைக்கும்படிச் செய்தது ஆழ்வார்களுடைய உபதேசம்தான்.

முதல் நண்பர்:—அப்படியானுல் ஜாதி குலம் பாராமல் அவர்கள் பணி செய்தார்களா? சண்டாளர்களென்று சிலரை ஒதுக்கி வைக்கவில்லையா?

நான்:—ஆழ்வார்களே பல வேறு ஜாதிகளைச் சேர்ந்தவர்கள்தான். பன்னிரண்டு ஆழ்வார்களிலும் நால்வரே பிராமண வகுப்பினர். ஜாதித் துவேஷம் அல்லது வகுப்புத் துவேஷம், ஆழ்வார்-ஆசாரியர்களிடத்தில் துளியும் கிடையாது. "பக்தி பெரிது; குலம் பெரிதன்று" என்பது அவர்கள்

(19-ம் பக்கம்)

# பக்தை - ஆவுடையக்காள்

(8-ம் பக்க தொடர்ச்சி)

சில் அவளுக்கு அருவருப்பாக இல்லை.

உடனே எல்லோரும் சேர்ந்து:—"சீ! துஷ்டை! என்று ஆவுடையின் மேல் காரித்துப்ப ஆரம்பித்தனர்."

ஆவுடை பேசவேயில்லை.....

சாதுவடிவத்தில் வந்த ஈசன் ஆவுடையை அன்புடன் அணுகிக்கிட்டே அழைத்துப் "பெண்ணே, உனக்கு உபதேசமே தேவையில்லை. நீ முற்றுந்துறந்து பரமநிலை எய்தி விட்டாய். வாது புரிந்து, வலுச் சண்டை செய்து, மதத்துத்திரியும் உலகத்தாரை உனது அரிய உபதேசத்தினால் நல் வழிப் படுத்து. இதுவே நான் உனக்குச் செய்யும் உபதேசம். எல்லா உயிர்களும் ஒன்று, நன்மையையும், தீமையையும் நன்கறிந்து நன்மையை நிலை நாட்டி, தீமையை ஒட்டி சமூகச் சீர்திருத்தம் செய்வது அறிவுடையோர் கடமை. அதற்கு ஆண் என்றும், பெண் என்றும் வித்யாசம் கிடையாது. ஒன்று நீ கவனிக்கவேண்டும். உன்னை ஜீவன் முக்தி அடைந்த உன்னை இந்தப் பதர்களால் ஒன்றுஞ் செய்ய முடியாது. ஆனாலும் உன்னைத் துச்சமாக எண்ணும்படி விடாதே! பரமாத்மா என்னும் சூஸ்திரதாரி-ஸர்க்கஸ்களில் மிருகங்களை ஆட்டுவிப்பன், மனிதர் என்ற மிருகங்களை நாடகமாட்டுகிறான்.

துஷ்ட மிருகங்களை அடித்து வசப்படுத்துவதுபோல், துஷ்ட மனிதர்களையும் துன்பம் என்ற சாட்டையினால் அடிக்கிறான். பேதை மானிடர் அறியாமையினால் "ஐயோ தெய்வமே! உனக்கு கண் இல்லையா? காது கேட்கவில்லையா? உனக்கு ஹிருதயமே கிடையாதா? இரக்கமில்லாத கல்லா நீ? இப்படி என்னைக் கஷ்டப் படுத்துகிறாயே என்றெல்லம் கதறுகிறார்கள். துன்பம் சற்று விலகியவுடன்; மறுபடியும் அகங்காரப்படவும் ஆத்திரப் படவும், கொடுஞ்செயல் புரியவும் நாசவேலை செய்யவும் ஆரம்பிக்கிறார்கள். மக்கள் அந்தகாரத்தில் அழுந்தி மடியாவண்ணம் அவர்களைத் தட்டி எழுப்ப வேண்டியது உன் கடமை, ஆனால் அவர்கள் உன்னைத் துன்புறுத்தாதபடி பார்த்துக் கொள். நீ என்றால் உன் ஆத்மா வல்ல. உன் சரீரத்தை அவர்கள் ஹிம்சிக்காதபடி பார்த்துக் கொண்டுவா. அவ்வளவுதான். சகல மானிடரும் தன்னை அறியும்படி நீ உபதேசிக்க வேண்டும். உனக்குள்ளேயே பரமாத்மாவைத் தரிசித்த உனக்கு இது கஷ்டமான விஷயமில்லை. இது தான் என் உத்தரவு. இதன்படி நட" என்று கூறி ஆவுடை பதில் சொல்லுமுன் மறைந்துவிட்டார். ஆவுடை அவரது மொழிகளிலே கருத்தூன்றியிருந்தபடியால் சிறிது நேரம் வரை அவர் சென்றதை உணரவில்லை. பின்பு வார்த்தைச் சப்தம் கேளாததைக்கண்டு "குருவே!". என்று கூப்பிட்டாள். அதற்கும் மறுமொழி கிடைக்காமல் இருக்கவே நிமிர்ந்து சுற்றிலும் நோக்கினாள். எதிரில் நின்ற சாதுவைக்காணோம். உடனே உண்மையை உணர்ந்தாள். அவள் தலையின்மேல் ஒருவண்டு பறந்து சென்றது. மனமோ குருவைக்காண அவாவுற்றது. மனத்தை ஒருவண்டாக பாவித்துப் பாட ஆரம்பித்தாள்.

ராகம் புன்னாகவராளி.
ஆதிதாளம்.

வண்டே நீ தூதுபோய்வா—
மகானுபாவனை
வணங்கி மகிமையறிந்து வா.
எங்கிலும் ஓடித்திரியாதே வண்டே.
குரு
இருக்கும் ஸ்தலம் சொல்கிறேன்
கேளாய்
அனைவரும் ஜீவன் முக்தாள்,
ஆசி விசாரணை செய்யும்
அதுவே அடையாளம். (வண்டே)
தேசாதி தேசம் புகழ் சிலாக்கியர்-
திருவிசநல்லூர் ஸ்தல யோக்கியர்-
சேவைக்காக மனம் வாடும் [அவர்
வகைகள் சொல்லி
விரும்பு மொழி கேட்டு,
திரும்பிவர வேண்டும் (வண்டே)
ஆனந்த அம்புதியில் அமிழ்ந்தேன்
அரவிந்தம் போலே மனம்
மகிழ்ந்தேன்
யார்க்கும் கிடையாத அபரோக்ஷ
சாக்ஷாத்காரம்
அடைந்தேன் உல்லாசமாக அநுபவ
நிஷ்டையினால் (வண்டே)

சிறிது நேரத்திற்கெல்லாம் ஆற்றிலிருந்த ஜனங்கள் யாவரும் ஆவுடையைச் சூழ்ந்து கொண்டு "தேவி அறியாமல் அபசாரம் செய்து விட்டோம். இன்று எங்களுக்குப் பெரிய புண்ணிய தினம். தாங்கள் எங்கள் பேரில் கிருபை செய்து எங்களுக்கு முக்தி மார்க்கத்தைப் போதிக்க வேண்டும் என்று வணங்கினார்கள். சிறிது நேரத்திற்குமுன் அவளைத் தூஷித்த ஸ்திரீகளும் திகைத்து நின்றார்கள்.

## பிரபந்த நந்தவனம்

(17-ம் பக்கத் தொடர்ச்சி)

கொள்கை. ஜாதி இன்னதென்று தெரியாது முதலாழ்வார்கள்.

மூவரைக் குறித்தும்.
திருமழிசை ஆழ்வாரோ,
குலங்களாய ஈரிரண்டில்
ஒன்றிலும் பிறந்திலேன்!

[குலங்களாய ஈரிரண்டு—நாலு வகையான ஜாதிகள்.]

என்று ஒப்புக்கொள்கிறார். திருப்பாணாழ்வார் 'பஞ்சம' குலத்தில் வளர்ந்தவர் என்பது பிரசித்தம். திருமங்கை மன்னர் கள்ளர் வகுப்பைச் சார்ந்தவர். குலசேகரர் அரசர் குலத்தினர். ஆழ்வார்களிலெல்லாம் மிகச் சிறந்த நம்மாழ்வாரோ, வேளாளர் வகுப்பினர். ஆண்டாள் கூடப் பெரியாழ்வார் நந்தவனத்திலே கண்டு எடுத்து வளர்த்து வந்த பெண். தொண்டரடிப்பொடி, பெரியாழ்வார், மதுரகவி ஆகிய மூவரே பிராம்மண குலத்தினர். எனினும் இந்த ஆழ்வார்களெல் தெய்வ சமானர்களாகக் கோவில்களில் இன்றும் பூஜிக்கப்படுகிறார்கள். இன்றும் இவர்களுடைய பிரபந்தங்கள் வேத சமானமாகக் கோவில்களில் ஓதப்படுகின்றன. ஸ்ரீரங்கம் கோவிலில் அடியார்கள் ஜாதி வித்தியாசமில்லாமல் எல்லாருக்கும் தந்தையான பகவானை வழிபட்டார்கள் 'என்பதை ஆராய்ச்சி ஞானமுள்ள பண்டிதர்கள் இன்றும் ஒப்புக்கொள்கிறார்கள்.

முதல் நண்பர்:—(குறுக்கிட்டு) அந்தப் பண்டிதர்களில் யாராவது ஒருவரைக் குறிப்பிட்டுச் சொல்ல முடியுமா?

நான்:—இதோ இந்தப் புஸ்தகத்தின் பெயர் "ஆழ்வார்கள் கால நிலை." இதை இயற்றியவர் ஆராய்ச்சித் திறமைவாய்ந்த பண்டிதர் மு. ராகவையங்கார். இவர் கூறுவதைக் கேளுங்கள்: "மிக உயர் குலத்தோரும் மிகத் தாழ் குலத்தோருமான திருமாலடியார் பலர் திருவரங்கப் பெருமான் திருமுன்றிலில் (சன்னிதியில்) சாதி வேற்றுமை அற ஒருங்கு குழுமி (கூடி) ஒருவரையொருவர் தெய்வ சமானராகக் கருதி வழிபட்டுவந்தனர் என்பதும், அக்குழுவினருள் (கூட்டத்திற்குள்) அத்தகைய வேற்றுமை பாராட்டுதல் பெரியதோர் அபசாரமும் இழுக்குமாக (நிந்தையாக)க் கருதப்பட்டு வந்ததென்பதும்..."

இரண்டாம் நண்பர்:—(குறுக்கிட்டு) பண்டிதர்களாலும் ஒப்புக் கொள்ளப்படுகிறதே! ஒரு காலத்தில் வைஷ்ணவம், கடவுள் சன்னிதியில் சகலரும் சமானர் என்ற கொள்கையை ஒப்புக்கொண்டிருந்தது என்று தெரிகிறது.

நான்:—வைஷ்ணவம் ஒரு காலத்தில் மட்டுமல்ல; எக்காலத்திலும் சகோதர தர்மத்தைப் போதித்து வந்திருக்கிறது என்பதில் சந்தேகம் இல்லை. உண்மையான வைஷ்ணவன் குறுகிய நோக்கமுடையவனாயிருக்க முடியாது.

இரண்டாவது நண்பர்:—லோக சாரங்க முனிவர் தம் தோள் மீது யாரோ ஒரு ஹரிஜன ஆழ்வாரைத் தூக்கிக்கொண்டு ஸ்ரீ ரங்கநாதன் கோவிலுக்குள்ளே போனார் என்ற கதை கூட—நான் எப்போதோ கேட்டிருந்தது—இப்போது ஞாபகத்திற்கு வருகிறது. குறுகிய நோக்கம் உள்ளவர்களால் அப்படி ஒரு கதையைக் கற்பனைசெய்யத் தான் முடியுமா?

நான்:—திருப்பாணாழ்வார் கதைதான் அது. அந்தக் கதையின் உட்பொருளைச் சிந்தித்துப் பாருங்கள். மேலும், பிராமணரும் பண்டிதரும் கிழவருமான மதுரகவியாழ்வார், இளைஞரும் வேளாளருமான நம்மாழ்வாருக்குச் சிஷ்யராக இருந்த அந்தச் சரித்திரத்தையும் சிந்தித்துப் பார்க்க வேண்டும். இந்த வரலாறுகளால், மத உணர்ச்சியைக் கொண்டு நமது நாட்டிலும் விரைவாக—திடீரென்றுகூட—மாறுதல்கள் செய்யக் கூடும் என்று ஏற்படுகிறது. தமிழர்களின் உள் மனத்தின் ஆழத்திலே மத உணர்ச்சியைத் தூண்டிவிட்டால், எப்படிப்பட்ட பழமையான வழக்கங்களையும் மாற்றிவிடலாம்.

இரண்டாம் நண்பர்:—அப்படியானால் வைஷ்ணவ இயக்கத்தைத் தாங்கள் "புரட்சி—இயக்கம்" என்றுகூடச் சொல்லத் துணிகிறீர்களா?

முதல் நண்பர்:—இது ஆதியில் ஜனங்களின் சீர்திருத்த இயக்கமென்றுவது சொல்லலாமோ?

இரண்டாம் நண்பர்:—ஆழ்வார்களின் பக்தி-மதத்தைஐரோப்பாவிலுள்ள 'பிராடெஸ்டெண்ட்' இயக்கத்தோடு ஒருவாறு ஒப்பிட்டுப் பார்க்கலாம். ஆனால், நம்மாழ்வார் முதலானவர்கள் லூதரைப்போல் போராடிச் சமய அமைப்புகளைப் புரட்டித் தள்ளிவிடவில்லை.

நான்:—பிரபந்த வாயிலாகவும், சில கதைகள் வாயிலாகவும் ஆழ்வார்களுடைய உபதேசங்களைப் பார்க்கும்போது, இது ஒரு சமய—சமூகச் சீர்திருத்த இயக்கம் என்று சொல்லத் தோன்றுகிறது. நம்மாழ்வாரை நோக்கும்போதோ, பாவிகளுக்கும் அருள் செய்து உபதேசித்து வந்த கிறிஸ்து பகவானின் ஞாபகமே வந்துவிடுகிறது. ஆனால், ஆழ்வார்கள் காட்டும் வழியை ஆசாரியர்கள் புது வழியென்று ஒப்புக்கொள்ளவில்லை. "இதுவும் பழைய வழிதான்; பழைய வழியின் ஸாராம்சம்" என்கிறார்கள்.

அருமறைகள் தமிழ்செய்நான்
 நாளே கொண்டு,
துன்பற்ற மதுரகவி
 தோன்றக் காட்டும்
தொல்வழியே நல்வழிகள்,
 துணிவார் கட்கே.

[அருமறைகள் தமிழ் செய்தான்-வேதம் தமிழ் செய்த நம்மாழ்வார். தாள்-திருவடி. தொல்-பழைய.]

என்று வேதாந்த தேசிகன் என்ற ஸ்ரீ வைஷ்ணவ ஆசாரியர் கூறுகிறார். நம்மாழ்வார் காட்டிய வழியே போய்த் தமது துன்பத்தைப் போக்கிக் கொண்ட மதுரகவி ஆழ்வார், பிறர் துன்பம் துடைப்பதற்கும் அதுவே நல்வழியென்று கண்டாராம். "இது வேத காலம் தொட்டு வரும் தொல்வழியும் கூட!" என்பது தேசிகர் திருவுள்ளம். ஹரிஜன முன்னேற்றத்திற்கும், இந்து மத அஸ்திவாரத்தைப் பலப்படுத்துவதற்கும்கூட இந்தப் பிரபந்தவழியே நல்வழி என்று தோன்றுகிறது.

இரண்டாம் நண்பர்:—அப்படியானால், இன்றும் வாடாத மலர்கள்தான் ஆழ்வார்களின் பாடல்களும் உபதேசங்களும்.

## ஸ்ரீ ஸத்தியமூர்த்தியின் கடிதங்கள்

(12-ம் பக்கத்தொடர்ச்சி)

கவனித்துக்கொள்ளவேண்டும். நமது ஸ்திரீகளும் ஆடவர்களும் நண்பர்களாகவும், சகோதர சகோதரிகள்போலவும் நடந்துகொள்ள வேண்டும். அஸம்பாவிதமாக ஏதும் இருக்கக் கூடாது.

நாடகத்தில் ஸங்கீதம் முக்கியமான அம்சம். பாட்டுக்களாலேயே உள்ள நாடகங்கள் அலாதியானவை. அவற்றில் பாட்டுக்கள்தான்; பேச்சு கிடையாது. அவை ரொம்பத்தரமாயிருக்கின்றன. ஆனால், நாடகம் என்று சொன்னால் சங்கீதத்துக்கான இடம் ரொம்பக் குறைவு. இதுபற்றி உன் அபிப்ராயம் என்ன? நாடகத்தின் வெற்றி அதிலுள்ள நடிப்பிலும் போக்கிலும்தான் இருக்கிறது. காட்சிகள் துரிதமாகவிருப்பது விசேஷம். நமது வாழ்க்கையில் ஒருவருக்கொருவர் பாடி விஷயத்தைத் தெரிவிப்பதில்லை. வாழ்க்கையைச் சித்தரித்துக் காட்டுவது நாடகம். அப்படியிருக்கையில் நடிகர்களும், நடிகைகளும் எதற்கெடுத்தாலும் ஏன் பாட வேண்டும்? இது பிசகு; நாடகம் இதனால் பாழாகி விடுகிறது. நடிப்பு பரம மோசமாகப் போனால், பாட்டுக்கள் ஈடு கொடுக்கும். அது நாடகமில்லை. நாடகத்தில் அங்குமிங்குமாகச் சிலபாட்டுக்கள் இருக்கலாம். ஆனால், பாட்டுக்கள் சொற்பமாயிருக்க வேண்டும். அடிக்கடி கூடாது.

பேசும் படங்கள் வந்துவிட்டனவே! இந்திய நாடகங்களுக்கு எதிர்காலம் உண்டா? இவை பற்றி என் அடுத்த கடிதத்தில் எழுதுகிறேன்.

(கையொப்பம்)



ரோம் நகரில் பிரிட்டிஷ் படை முன்னேறுகின்றன. வால்டர்னோ என்ற ஆற்றை பிரிட்டிஷ் துருப்புகள் கடந்து செல்வதை அமெரிக்க என்ஜினீயர்களில் மூவர் கவனிக்கின்றனர். உடனே அமைத்த பாலம் இது.

# டபீர்ஸ்வாமி

★ கி. வா. ஜகந்நாதன்

[தமிழ்த் தாத்தா சொன்ன ஊறுகாய் கதைகளில் இதுவும் ஒன்று.]

கும்பகோணம் காலேஜில் ஐயரவர்கள் இருந்தபோது ஆங்கிலம் முதலிய பாடங்களைக் கற்பிக்கும் பேராசிரியர்களும் அவர்களும் நெருங்கிப்பழகுவார்கள். மனங்கலந்து பேசி இனிமையாகப்பொழுதுபோக்குவார்கள். அங்கே ஒருநாள் பல ஆசிரியர்கள் சேர்ந்து அமர்ந்து விநோதமாகப்பேசிக் கொண்டிருந்தார்கள். "இந்த ஊரில் டபீர் தெரு என்று ஒன்று இருக்கிறது. அதற்கு ஏன் அந்தப் பெயர் வந்தது? டபீரென்று அங்கே ஏதாவது வெடித்ததா? அல்லது வேறு காரணத்தால் வந்ததா?" என்று ஒருவர் கேட்டார்.

"டபீர் ஸ்வாமி என்ற ஒரு பெரியவர் இருந்தார். அவருடைய பெயரை இட்டு வழங்குகிறார்கள். அநேகமாக அவர் மகாராஷ்டிரராக இருந்திருப்பாரென்று தோற்றுகிறது" என்று வேறு ஓர் ஆசிரியர் விடை கூறினார்.

முதலில் கேள்வி கேட்டவர் தொடர்ந்து, "அப்படியானால், அந்தப் பெயர் அவருக்கு மாத்திரம் எப்படி வந்தது?" என்று வினவினார்.

அந்த வினவிற்கு ஒருவரும் பதில் சொல்லவில்லை. சிறிது நேரங்கழித்து அங்கிருந்த ஆர். வி. ஸ்ரீநிவாசையர் என்ற பேராசிரியர் சிறிது கனைத்துக் கொண்டு, "நான் சொல்லட்டுமா?" என்று கேட்டார். கேட்கும்பொழுதே அவர்பால் தோன்றிய புன்னகை அவர் ஏதோ வேடிக்கையாகச் சொல்லப்போகிறார் என்பதைக் குறிப்பித்தது.

"சொல்லுங்கள், கேட்கலாம்" என்று ஆசிரியர் யாவரும் ஒருமுகமாகக் கேட்டார்கள்.

ஸ்ரீநிவாசையர் சொல்ல ஆரம்பித்தார்.

* * * *

தஞ்சாவூரில் மகாராஷ்டிர அரசர்கள் ராஜ்யபாரம் நடத்தி வந்தபோது அவர்களுடைய உறவினர்கள் பலர் அந்த ஊரில் வாழ்ந்து வந்தார்கள். அவர்களுக்கு அரண்மனையிலிருந்து ஊதியம் கிடைத்து வந்ததோடு, இயல்பாகவே பொருள் உடையவர்களாகவும் இருந்தார்கள்.

இவ்வாறு வாழ்ந்து வந்த மகாராஷ்டிர கனவான்களுள் ஒருவர் மிகவும் சுறுசுறுப்புடையவர். அவருடைய வாழ்க்கைக்குப் போதிய வசதிகள் இருந்தாலும் அவரது சுறுசுறுப்புக்கு ஏற்ற வேலை இல்லாமையால் அவருக்கு உத்ஸாகம் குறையத் தொடங்கியது. அவருடைய மனைவியும் பிறரும் அரண்மனை உத்தியோகம் ஒன்றைப் பெற்றுப் பார்க்கும்படி சொன்னார்கள். அரண்மனை வேலைக்கு ஏற்ற தகுதி அவரிடம் இல்லை. சாமானிய வேலைகளுக்குப் போகவும் அவருக்கு இஷ்டம் இல்லை.

இந்த நிலையில் அவர் தீவிரமாக யோசனை செய்யலானார். தம் கைப்பொருளைச் செலவு செய்தாவது ஏதேனும் உத்தியோகம் செய்யத்தான் வேண்டுமென்ற உறுதி அவருள்ளே தோன்றியது. என்ன உத்தியோகம் செய்வது? யோசித்து யோசித்துப் பார்த்தார். கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தார். ஒரு நாளில் இருபத்து நாலு மணி நேரமும் வேலை செய்தாலும் செய்யும்படியான உத்தியோகமொன்றைத் தாமே ஏற்படுத்திக்கொள்ள எண்ணிவிட்டார்.

அரண்மனைக்குப் போகும் சாலையில் அரண்மனைக்குச் சிறிது தூரத்தில் பரந்த வெளியாக இருந்த இடத்தில் ஒரு பகுதியை விலைக்கு வாங்கினார். அங்கே ஒரு சிறிய கட்டிடம் கட்டிக்கொண்டார். நாற்காலி, மேஜை, பேனா, பென்ஸில், மைக்கூடு, காகிதங்கள், குறிப்புப் புத்தகங்கள் முதலிய உபகரணங்களெல்லாம் தம் கைப்பொருளைச் செலவு செய்து வாங்கி நிரப்பி அதைத் தம்முடைய உத்தியோகசாலையாக ஆக்கிக் கொண்டார். நல்ல நாளில் நல்ல வேளையில் சம்பளமில்லாத அந்த உத்தியோகத்தைப் பார்க்கத் தொடங்கி விட்டார். சம்பளம் இல்லாவிட்டால் என்ன? அவருக்குப் பணம் இல்லையா? உத்தியோகம் செய்கிறோமென்ற உத்ஸாகமும், சோம்பேறியாகப் பொழுதைப் போக்காமல் சுறுசுறுப்பாக இருக்கிறோமென்ற திருப்தியுமே அவருக்கு ஊதியமாயின.

தினந்தோறும் காலையில் எட்டு மணிக்கு அவர் நல்ல உடைகளை அணிந்து கொண்டு போய் விடுவார். உணவு கொள்ள வேண்டிய வேளைகளில் வீட்டுக்குப் போய் வருவார்; இல்லையானால் அந்த இடத்திற்கே உணவை வருவித்துக் கொள்வார். இரவு எட்டு ஒன்பது மணி வரையில் தம் 'உத்தியோகத்தை'ப்பார்ப்பார். பிறகு காரியாலயத்தைப் பூட்டிக் கொண்டு போய் விடுவார். சில நாட்கள் உத்ஸாக மிகுதியினால்



இரவு நேரங்களிலும் அங்கே தங்கி விடுவது உண்டு.

அது என்ன உத்தியோகம்? சரியானபடி வேலை வாங்கும் உத்தியோகந்தான். சோம்பலில்லாமல் ஒவ்வொரு நிமிஷமும் ஜாக்கிரதையாகக் கவனித்துச் செய்ய வேண்டிய காரியம். வீதி வழியாக யார் யார் போகிறார்கள்? அவர்கள் உருவம், உடை, காதில் விழுந்த பேச்சு, போகும் நேரம்-இவைகளை எல்லாம் குறித்து வரும் வேலையை அவர் யாருடைய ஏவலுமின்றி ஊதியத்தை எதிர்பாராமல் செய்துவந்தார். சாலையில் எந்த நிமிஷத்தில் யார் வருவாரென்று கண்டார்கள்? இளைய அழகிய மங்கை ஒருத்தி போவாள்; அடுத்த கணத்தில் கிழட்டு எருமை ஒன்று அவ்வழியே ஓடும். கோபத்தோடு இருவர் பேசிக் கொண்டே போவார்கள்; தொடர்ந்து கொம்மாளம் போட்டுக்கொண்டு சில சிறுவர்கள் நடப்பார்கள். எல்லாவற்றையும் ஒன்றுவிடாமல் குறித்துக் கொள்ளும் கைங்கரியத்தை அந்த மகாராஷ்டிர கனவான் செய்து வந்தார்: தேதி வாரியாக, மணிவாரியாக, நிமிஷ அடைவிலே கடிகாரத்தைப் போல அவர் உத்தியோகம் பார்த்தார். எவ்வளவு பொறுப்புள்ள வேலை?

தம்முடைய உத்தியோக சாலையின் ஜன்னல் வழியே உலகத்தைப்பார்த்து அதன் பல வேறுபட்ட போக்குகளையும் குறிப்பெடுக்கும் ஆராய்ச்சியாளரைப்போல அவர் வெகு சிரத்தையுடன் வேலை செய்தார். 'கலை கலைக்காகவே' என்று சொல்வார்களே, அந்த மாதிரி அந்த வேலையை வேறு பயன் எதையும் கருதாமல் அவர் செய்து வந்தார்.

அவருக்குத் தாம் செய்து வந்த உத்தியோகத்தினால் ஏற்பட்ட உத்ஸாகம் கிடக்கட்டும்! அவர் வீட்டாருக்கோ அவர் ஏதோ பொறுப்புள்ள அரண்மனை உத்தியோகத்தை ஏற்றுக்கொண்டிருக்கிறார் என்ற கௌரவபுத்தி உண்டாயிற்று. "இவர் என்ன செய்கிறார்?" என்று அறிய எண்ணிய யாரோ சிலர் அவர் ஏகாக்கிர சித்தத்தோடு வேலை செய்வதைப் பார்த்து, இடையிட விரும்பாமல் போய் விட்டார்கள். அவர் உத்தியோகம் யாதொரு தடையுமின்றி இவ்வாறு நடைபெற்று வந்தது.

ஒரு நாள் அரண்மனையில் ஒரு தங்கப் பாத்திரம் காணாமற்போயிற்று. எங்கெங்கோ தேடிப்பார்த்தார்கள், கிடைக்கவில்லை. யார் திருடினார்கள் என்று தெரிந்துகொள்ள முடியவில்லை. பலவகையில் ஆராய்ச்சி செய்து விசாரித்தபோது அன்று மாலையில் அதை யாரோ ஒருவன் எடுத்து போயிருக்கிறானென்று தெரிய வந்தது. அரண்மனைக்கு அடிக்கடி வந்துபோகும் பழக்கமுடைய அவனைச் சந்தேகித்துச் சோதனைபோட்டார்கள். பண்டம் அகப்படவில்லை.

யாரோ ஒருவர், "இந்தத் துப்புத்துலங்க வேண்டுமானால் கடைசியாக ஒரு வழி இருக்கிறது. இதோ இந்தச் சாலையில் ஒரு மகாராஷ்டிரர் இருக்கிறார். அவர் ஒரு பைத்தியக்கார உத்தியோகம் பார்த்து வருகிறார். அவரிடமுள்ள குறிப்புக்களைப் பார்த்தால் நமக்கு ஏதாவது உளவு கிடைக்கலாம்" என்று சொன்னார். அரண்மனை உத்தியோகஸ்தர்கள் அதையும் பார்த்துவிடலாமென்று எண்ணி அந்த மகாராஷ்டிர

கனவானுடைய உத்தியோக சாலைக்கு வந்தார்கள்.

அவர்களை அந்தக்கனவான் வரவேற்றார். பிறகு அவர்கள் விரும்பியபடி தம்முடைய தினக்குறிப்புக்களைக் காட்டினார். 'ஒரு பிரயோசனமும் இல்லாமல் வேலையற்றுப்போய் இந்த மனிதன் இப்படி எழுதிக் குவித்திருக்கிறானே!' என்று அவர்கள் எண்ணி நகைத்தனர். பிறகு தங்கப்பாத்திரம் களவு போனநாளில் எழுதியவற்றைப் பார்த்தார்கள். அன்று காலையிலிருந்து இரவுவரையில் அந்தச் சாலையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் இருந்தன; பின்வரும் குறிப்பு அவர்கள் கண்களில் பட்டது:

"மாலை 6-30 மணி. ஒரு குட்டையான மனிதன் தன் மேல் வேஷ்டியில் எதையோ மறைத்தபடியே வந்தான். அரண்மனையிலிருந்து வந்திருக்கலாம். எதிரே உள்ள சாக்கடைக்கு அருகில் உட்கார்ந்தான். உடனே டபீர் என்ற சப்தம் கேட்டது; அடுத்த நிமிஷம் அவன் எழுந்து போய்விட்டான்.

இதை வாசித்தவுடன் அரண்மனையிலிருந்துவந்தவர்கள் சாக்கடைப் பக்கம் போய்அதற்குள் 'டபீர்' என்றுவிழுந்த வஸ்து எதுவாயிருக்கலாமென்று தேடினார்கள். என்னஆச்சரியம்! அவர்கள் எதைத்தேடி அவஸ்தைப் பட்டு கொண்டிருந்தார்களோ, அந்தப் பண்டமே அதற்குள் இருந்தது 'அரண்மனையிலிருந்து திருடிக்கொண்டு வந்தவன் இப்போது இங்கேபோட்டு வைக்கலாம், திருட்டுவிசாரணை நடந்து ஓய்ந்த பிறகு எடுத்துக் கொள்ளலாம் என்றுஎண்ணிபோட்டிருக்கிறான்'என்றுஊகித்துக்கொண்டார்கள். 'டபீர் என்ற சத்தம் கேட்டது' என்ற குறிப்பு இல்லாவிட்டால் திருட்டுப் போன பண்டம் கிடைத்திருக்காதென்பதை எண்ணியபோது, அந்தச் சம்பளமில்லாத உத்தியோகஸ்தரிடத்தில் அவர்களுக்கு அபார மதிப்பு ஏற்பட்டுவிட்டது.

அவரை அரசரிடம் உபசாரத்தோடு அழைத்துச்சென்று, திருட்டுப்போன பாத்திரம் அவரால்தான் கிடைத்ததென்று சொல்லி அவர் உத்தியோகச் சிறப்பையும் எடுத்துரைத்தார்கள். 'டபீர்' என்ற சப்தத்தைக் கவனித்துக் குறிப்பெழுதிய அந்தக் கனவானுக்கு 'டபீர் ஸ்வாமி' என்ற பட்டமும், ராஜ ஸன்மானமும் கிடைத்தன.

கதையைச் சொல்லிவிட்டு, "டபீர் ஸ்வாமியின் வரலாறு பொருத்தமாக இருக்கிறதா?" என்றார் ஸ்ரீநிவாசையர்.

## சின்னச் சாம்பு

(10-ம் பக்கத் தொடர்ச்சி)

நிறம். ஏன் நிறமோ, உலகத்தில் ஏளனமாகக் கருதப்படும் கறுப்பு நிறம். உனக்கு, என்னிடம் அக்கறை இருக்க நியாயம் எதுவுமில்லை. ஏதோ, சிறு பிள்ளைகளாக, இதுவரையிலும் விளையாடிக் கொண்டு வந்து விட்டோம். இனி, நமது பாதைகள் வெவ்வேறு வழி' என்று சாம்பு, மிக மெல்லிய குரலில் பேசினான்.

ரோஸின் முகம் வாட்டம் அடைந்தது. 'அசடாகத்தான் பேசுவேன், நினைப்பேன் என்று பிடிவாதம் பிடிக்கிறவர்களை, யாரும் தடுக்க முடியாது. கெட்டிக்கார சாம்பு என்ற சிட்டு இனி மேல் செல்லாது. அசட்டுச் சாம்பு என்றுதான் இனிமேல், உன்னை அழைக்க வேண்டும். உன் இயற்கையான சுபாவத்தோடு இரு. அதை மாற்றிக் கொண்டு, மனம் தடுமாறாதே' என்று ரோஸ், புன்னகையுடன், சிறு பிரசங்கம் செய்தாள்.

'தங்கள் வார்த்தைதான் எப்பொழுதும் கடைசி வார்த்தையாக இருக்க வேண்டும் என்பது பெண்களின் பிடிவாதமான இயற்கை. அதை கெடுக்க, எனக்கு மனமில்லை. நீ சொல்லுகிறமாதிரிதான் இருக்கட்டுமே' என்று அவன் பேசி முடிக்கு முன், 'அப்படியேதானிருக்கட்டுமே!' என்று சந்தடி செய்யாமல் வந்த பாதிரியார் ஆமோதித்தார். சாம்பு திடுக்கிட்டுப் போனான்.

'சாம்பு! சுகமா? நீ பரிக்ஷையில், மாகாணத்திலேயே, முதல் பையனாக தேறினது, நமது பள்ளிக்கு ரொம்பவும் பெருமையானது, நீ சென்னைக் கலாசாலையில், எம். ஏ பட்டம் பெற்று, சீமைக்குப் போய் படிக்க வேண்டும் என்பது என் ஆசை; மேல் படிப்புக்காக, சென்னைக்கு எப்பொழுது புறப்படப் போகிறாய்? நீ கூடிய சீக்கிரம் அங்கே வருவாய் என்று கிறிஸ்தவக்கல்லூரி தலைமை ஆசிரியருக்கு, நான்கு நாட்களுக்கு முந்தியே கடிதம் எழுதி விட்டேன்' என்றார்பெரிய துரை.

'மேலே படிக்க எனக்கு மனமுமில்லை; கையில் பணமும் கிடையாது. எங்கள் குடும்பம் வளர்ந்து கொண்டேயிருக்கிறது. செலவுக்குப் போதிய வருமானம் இல்லை. ஏதாவது வேலைக்குப் போய், நாலு காசு சம்பாதித்தால் குடும்பத்துக்கு ஒத்தாசையாக இருக்கும். அதற்காகத்தான், உங்கள் உதவியை நாடி வந்திருக்கிறேன்' என்று சாம்பு சொன்னான்.

'குடும்பத்துக்கு ஒத்தாசையாக இருக்கவேண்டியதுதான். நிறைய சம்பாதிக்க லாயக்காயிருக்கக்கூடிய படிப்பை படித்தால், பரிபூரணமாக உதவி செய்யலாமே? உங்கள் குடும்பம், இன்னும் சிறிது காலம் கஷ்டத்தைப் பொறுத்துக்கொண்டு, உனது மேல் படிப்புக்கு சாதகமாயிருந்து,வசதி அளிக்கக்கூடாதா? உன் படிப்புச்செலவைப்பற்றி நீ கவலைப்படவேண்டாம்' என்று பெரிய துரை பரிவுடன் சொன்னார்.

'ரொம்ப செலவு ஆகும். என் தாயார் என்னை சென்னையில் தனித்து இருக்கவிட சம்மதிக்க மாட்டாள். அவள் என் கூடவே இருக்கணும் என்பாள். அப்படியானால், என் விதவை அக்காளும் கூட வரவேண்டியிருக்கும். சென்னையில், குடித்தனம் நடத்துவதாயிருந்தால், ஏகப்பட்ட பணம் பிடிக்கும் என்கிறார்கள். ஆகவே, படிப்பு யோசனையை, பின்னால், சிறிது காலம் பொறுத்துப் பார்த்துக்கொள்ளலாம். ஒரு உத்தியோகத்துக்கு, நீங்கள் இப்பொழுது ஒத்தாசை செய்தால் போதும், என்றான் சாம்பு.

சாம்புவின் யோசனை எடுபடவில்லை. அவன் மேலே படிக்க வேண்டும் என்றும் அதற்கான பொறுப்பு முழுமையையும் தாம் ஏற்றுக்கொள்ளுவதாகவும் பெரிய துரை பிடிவாதம் பிடித்து விட்டார். சரி என்று சாம்பு ஒப்புக்கொள்ளும்படி, பாதிரியார் எப்படியோ செய்துவிட்டார்.

சாம்பு போகும் பொழுது, 'நிறம் பெரிதல்ல; திறன் தான் பெரிது. பணம் பெரிதல்ல: குணம் தான் பெரிது' என்று பாதிரி சொன்னார். இது சாம்புவை திடுக்கிடச் செய்தது.

பெரிய துரையின் யோசனையை, சாவித்திரி அம்மாளும் மாமா சேஷனும் உள்ளப் பூரிப்புடன் வரவேற்றார்கள்.

(தொடரும்)

### அட்டைப் படம்

★

'பல ஹிந்திப் படங்களில் நடித்துப் புகழ் படைத்த ஸ்நேகப் பிரபா 'லடாயி-கே-பாத்' என்ற படத்தில் இந்த மாதிரி தோற்றம் கொண்டிருக்கிறார்.

# நாக கன்னிகை

(6-ம் பக்கத் தொடர்ச்சி)

மோதிச்சென்றது. அந்தச் சிறு சந்தையன்றி மற்ற இடமெல்லாம்-சுற்றிலும் சுவர் எழுப்பியதுபோன்று பாறைகள் காணப்பட்டன. நீலன் அதைக் கண்டதும் சிறிதே கூர்ந்து நோக்கினான்.

அதுவரையில், மோட்டிலும், பள்ளத்திலும் ஓடி வந்த நீரோட்டம் அந்த இடத்திலே தடைப்பட்டு, 'துடும் துடும்' என்ற ஒலியுடன் பாறையைக் குடைந்திருக்கும் சிறு 'முழைஞ்சு' (சந்து) வழியே செல்வதைக் கண்டு, அருகில் சென்று நோக்கினான். சிறு சந்திலே முகத்தை நீட்டிப் பார்த்தான். அவ்வளவிலே அவன் கண்ட காட்சி அவனை வியப்பும் திகைப்பும் கொள்ளச் செய்தது.

அந்த அருவியோட்டம் சிறு சந்தின் வழியே சென்று நேர் கீழாக உள்ள தடாகம் ஒன்றில் விழுகிறது. பாறைகளிலே அகழப்பட்டதாகவே விளங்கியது அத்தடாகம். அந்தத் தடாகத்தை அடுத்தாற்போல் மலையிலே குடைந்து செய்த மாளிகைகள் காணப்பட்டன. ஆனால் நீலனின் மனத்தை வியப்பும் திகைப்பும் கொள்ளச் செய்த காட்சி அவை அல்ல. தடாகத்திலே, அருவி விழும் பாறைக்கு நேராக நின்று ஓர் இளநங்கை நீராடுகிறாள். அவளைக்கண்டேதான் நீலன் திகைத்தான். அவன் கண்கள் அந்த இளநங்கையின் மேனியிலே பதிந்தன. ஆனால் அவனை அவள் காணவில்லை; எவ்வாறு காணமுடியும்? அல்லாமல் அவ்விடம் ஆடவர் அணுகாத அருங்கடி வரைப்பு என்றல்லவா அவள் கருதி நீராடுகிறாள்!

**காலையில் கண்ட நல்லினியே!**

நீலன் மனம் விதுப்புற்றது. அவளை நோக்கிய கண் அகற்றாமல் நோக்கினான். பொன்னின் ஒளியுடையாளாகிய அவள் மேனியின் மீதே, அருவியின் பளிங்கு நீர் வீழ்ந்து சிதறும் காட்சி அவன் மனத்தில் பெருங் கிளர்ச்சியை உண்டாக்கியது. மெய்ம்மறந்து சிறிதே சந்தின் மீதே ஏறினான். சிற்பம் வல்லோன்; பொன் கொண்டு வார்த்துச் செய்த பெண் பிரதிமைபோல் அவள் விளங்குவதைக் கண்டான். அந்நிலையில் அவன் அவ்வழியே இறங்க எண்ணினான். ஆனால் அவ்வழியே இறங்குவது அவனுக்குப் பயத்தை அளித்தது. சற்றே அமைதியாக அவளை நோக்கினான். அந்த இடத்தையும் கூர்ந்து கவனித்தான். சட்டென்று அறிந்து கொண்டான். "ஆம்! இவள் நாம் காலையில் பார்த்த நல்லினி என்பவள்தான்! இந்த அழகு நங்கையையே நான் காலையில் கண்டேன். இது இவளிருப்பிடமாகத்தான் இருக்கவேண்டும். தெய்வமே எனக்கு வழி காட்டியது இவளைப்பெற்ற பின் இனி நாககன்னியைக் காண்பது பெரிதல்ல" என்று தனக்குள் கூறிக் கொண்டான்.

**"ஐயோ! இது என்ன?"**

நல்லினியின் நீராட்டு முடியும் தருணம்; நீலன் விரைந்து சந்து வழியே வெளி வந்தான். சிறு சிறு பாறைகளிலே கால்களை ஊன்றவைத்து மெள்ள இறங்கலானான். அவன் இறங்கும் இடம் மிகவும் சீர்கேடாகவும், பாசி படிந்தும், செங்குத்தான நிலையாகவும் இருந்தமையால் பெரிதும் அவன் சிரமப்பட்டான். ஒரு சிறு பாறை தவறினாலும் நீலனின் உடல் சிதறுண்டு, அருவியிலே கலந்து தடாகத்திலே போய் விழும். அந்நிலையில் நீலன் அமைதியாக இறங்கும்போது, கீழே நீராட்டு முடிந்து ஆடை அணிந்து நிமிர்ந்த நல்லினி அவனைக் கண்டாள்; கண்டதும் திகைப்பும் திகிலும் கொண்டாள்; "யார் இப்படி இறங்குபவர்? ஐயோ! இதென்ன?...... என்று யோசித்து மீட்டும் உற்றுப் பார்த்த அவள் 'ஆம், இவர் நாககன்னிகையுடன் இருந்த வீரர் அல்லவா? ஏன்? எங்கிருந்து எங்கு வருகிறார்? ஐயோ! சிறிது தவறினாலும் உடல் சிதறிப் போய்விடுமே! என்ன துணிவு? ஒருக்கால் தவறி விழுந்தால் என்ன செய்வது? ஆம்! நாக கன்னிகை சொல்லியதுபோல் இவர் பெரிய வீரர்தான்! இதோ போகிறேன்! இவரைக் காப்பது என் கடமைதானே! ஆனால் என் தந்தை இவரைச் சிறை செய்தல்லவா எங்கோ அனுப்பினார்! இவர் தப்பிவந்து விட்டாரோ!" என்று பலவாறு யோசித்தவளாய் முன்னே ஓடினாள். நீலன் சிறிதும் அவளைக் கவனியாமல் மெள்ள மெள்ள இறங்கிக் கொண்டிருந்தான். நல்லினி, அருவியின் புறமாய்ப் பாறை மீதே நடந்து நீலனை நோக்கி மேலேறினாள்; "ஐயா, ஐயா, சற்று இருங்கள். நான் வழி காட்டுகிறேன்? நீங்கள் எங்கிருந்து எப்படி வருகிறீர்கள்? இவ்விடத்தில் தாங்கள் இப்படி வருவது தகுமா?" என்று கூறிக் கொண்டே சென்றாள்.

**விதியின் விசித்திரம்!**

அப்போதுதான் நீலன் அவளைக்கவனித்தான். அவள் வருகையைக் கண்டு உள்ளம் களித்தான். அவளைப்பார்த்து விழுங்குவான்போல் பிரமித்து நின்றான். "ஓ, நீதானா? உனக்கு இருக்கும் அன்பில் ஒரு துளிக்கூட உன் தந்தைக்கு இல்லையே! எங்கள் யாவரையும் கடலில் தள்ளிவிட கடுஞ்சித்தம் அவருக்கு எப்படி வந்தது? ஆனால் உன்னைக்கண்டதும் எல்லாம் மறந்துவிட்டேன். கடலில் உயிருக்குப் போராடிய போதும் உன்னையே நினைந்து மனம் இரங்கினேன்! நாக கன்னிகையிடம் இரக்கம் காட்டிய நீ என்னிடம் இரக்கம் கொண்டால் நான் கடலில் தள்ளப்படுவேனா? .." என்று மெய்மறந்து, பழகியவரிடம் பேசுவதுபோல் கூறினான். நல்லினியும் அவனைக் கண்டு பேராவலோடு முன்சென்றாள்.

விதியின் விசித்திர விளைவால் அவ்விருவர் கண்களும் சந்தித்தன. இருதயத்திலே புத்துணர்ச்சி உண்டாகியது இருவருக்கும். அவனும் அவளும் நெருங்கிய உறவுடையவர்போல் ஒருவரை ஒருவர் அன்புகனிய நோக்கினர்.

"என்ன, தாங்கள் கடலில் தள்ளப்பட்டீர்களா? அப்படியானால், இந்த மலைப்பாறை வழியே எப்படி வந்தீர்கள்? பாறைகளில் தொற்றி ஏறினீர்களா? மற்றவர்கள் ..." என்று வியப்போடு கேட்டாள், நீலனின் மார்பழகைக் கண்டவாறே.

"ஆம்! வேறு வழி? நான் தப்பியது கடவுள் செயல்! மற்றவர் கதி என்ன ஆயிற்றோ நான் அறி

யேன்!'' என்றவாறே நீலன் அவளை அணுகினான்.

**நாககன்னிகை வருகை**

"ஐயா, என் தந்தை அறிந்தால் ஆபத்து விளையும்; விரைவில் இதோ, இப்படியே வந்துவிடுங்கள்! வாருங்கள்'' என்றாள். கையை அவன் முன்பு நீட்டி மெய்மறந்து அவன் அழகிலே ஈடுபட்ட அவள் அவன் அணுகும் வரையில் அப்படியே நின்றாள். நீலனும் நினைவிழந்து, அவள் அழகிலும் பேச்சிலும் மனம் பறிகொடுத்தவனாய் அவளை அணுகினான். அவள் கரத்தைப் பிடித்துக்கொண்டே அவள் பின் நடந்தான். தடாகத்தின் கரையை அடையும் வரையில் இருவரும் வாய்திறந்து பேசவில்லை. கரஸ்பரிசத்தால் உள்ளம் விதுப்புற்று உணர்ச்சிவசப்பட்டு நினைவிழந்து நடந்து வந்தனர். தடாகத்தின் கரையை அடைந்த அளவிலே, தன் நிலையை உணர்ந்த நல்லினி, சட்டென்று கையை விடுவித்துக்கொண்டு நாணத்துடன் ஒதுங்கி நடந்தாள். அவர்கள் வருகையைக் கண்டு "நீலா, நீலா'' என்று கூவிக்கொண்டே நாககன்னிகை ஒருபுறமாக ஓடி வந்தாள். நல்லினி அவளை இடைமறித்து, சப்தம் செய்யவேண்டாம் என்று குறிப்பிட்டாள்.

மூவரும் விரைந்து கன்னிமாடத்தின் மாளிகைக்குள் புகுந்தனர். நீலனின் வருகையால் நாககன்னிகை பேருவகை கொண்டாள். அது மட்டுமல்ல. நீலனும் நல்லினியும் கைகோர்த்து வந்த காட்சி அவளைப்பெரிதும் குதூகலம் அடையும்படி செய்தது. 'இவர்கள் எப்படிக் கலந்தார்கள்?' என்று அதிசயமும் ஆச்சரியமும் கொண்டாள் நாககன்னிகை.

**நீலன் நிலை சோர்ந்தான்**

நீலனின் மனத்தில் எழுந்த கிளர்ச்சி தணியவில்லை. நல்லினியின் பார்வை அவன் உள்ளத்தைக் கவர்ந்துவிட்டது. கடலில் நீந்திய சோர்வும், பாறைகளில் ஏறி இறங்கிய களைப்பும், நல்லினியைக் கண்ட அளவிலே மறைந்துவிட்டன. அவள் வசப்பட்டு, தன் நினைவற்று அவள் பின்னே நடந்தான். ஏதோ அவன் மனத்தில் என்றுமில்லாத புத்துணர்ச்சி அலை பாய்ந்தது நல்லினியின் பார்வையால். அவளிடமுள்ள கவர்ச்சியால் உள்ளத்தைப் பறிகொடுத்த அவன், அவள் கரத்தையும் தீண்டி பல நாள் பழகிய நட்பினன்போல் நடந்தான். ஆனால் நாககன்னியை அவன் கண்ட அளவிலே, நிலை சோர்ந்தான். அப்போதுதான் அவன் நினைவு புரண்டது. நல்லினியையும் நாககன்னிகையையும் மாறி மாறி நோக்கியும், மாறி மாறிச் சிந்தனை செய்தும் அவர்களுடன் கன்னிமாடம் புகுந்தான்.

கன்னி மாடத்தில் நிசப்தமான ஒரு முற்றத்தில் மூவரும் அமர்ந்தனர். மூவருள்ளமும் ஒன்று கூடிக் குலாவின. ஒவ்வொருவர் உள்ளத்திலும், ஒவ்வொருவிதக் கிளர்ச்சி ஊடுருவிப் பாய்ந்துகொண்டிருந்தது. நீலனின் பார்வை ஒருபுறமும், அவன் சிந்தனை ஒருபுறமும், அவன் வாய்ச் சொற்கள் வேறு விதமாகவும் ஒன்றுக்கு ஒன்று தொடர்பில்லாமல் இருந்தது. ஆனால் நாககன்னிகை நீலனின் நிலையை நன்கு உணர்ந்தாள். நீலன், ஒருவாறு, கடலில் தான் தடுமாறியதையும், வேளிரின் கடுந் தண்டனையையும், மற்ற நாக வீரர்களின் கதியையும் நாககன்னியிடம் கூறினான். நாக நாட்டு வீரர்கள் கடலிலே தள்ளப்பட்டு மாய்ந்த செய்தியைக் கேட்டு நாககன்னிகை மனம் பதறினாள். இந்நிலையில் நல்லினியின் மனம் புண்பட்டது. தன் தந்தையின் கடுந்தண்டனையை எண்ணி மனம் மறுகி, நாககன்னியிடமும், நீலனிடமும் ஆறுதல் வார்த்தைகளைச் சொன்னாள்.

**நிறைவேற்றாமல் முடியாது!**

நல்லினியின் பேச்சைக் கேட்ட அளவிலே நீலனின் சிந்தனை விரிவடைந்தது. 'நான் ஏன் இவ்விதம் மாறிவிட்டேன்? நாககன்னியிடம் காணாத ஒரு புதுக் கவர்ச்சியை இவளிடம் காண்கிறேன்! நான் இந்தத் தீவை அடைந்ததற்குக் காரணம் இவளைக் கண்டு கலங்கவோதான்! நேற்று நான் இருந்த நிலை என்ன? இன்று நான் மாறியிருக்கும் தன்மை என்ன? நாககன்னிகை, என் நிலையைக் கண்டு ஏதோ வேறுபட்டிருக்கிறாள். இந்த வேளிர் கன்னியிடம் எனக்கு உண்டாயிருக்கும் ஆசைக்கும், நாககன்னியிடம் நான்

கொண்டுள்ள அன்பிற்கும் எவ்வளவோ வேறுபாடு இருக்கிறது! ஆம்! கொழுந்துவிட்டு எரியும் தீப்பிழம்புக்கு ஒப்பாக, நாககன்னியிடம் அணுகியும் அணுகாமலும் பழகும் நான், இன்று இந்த நல்லினியைக் கண்ட சிறிது நாழிகையில், இவள் அழகிலே மனம் தளர்ந்து அவசமானேனே! இவள் கரத்தைத் தீண்டி அதனால், உண்டான இன்ப உணர்ச்சியிலே மெய்மறந்து நினைவிழந்தேனே! இதுதான் அறிவுக்கும் புலனாகாத விதியின் விசித்திர சக்தியோ? இனி நான் இவளைப் பிரிந்து சென்று என் கடமைகளைச் செய்வதுமுடியுமா? இவள் உள்ளத்தில் பிரதிபலிக்கும் எண்ணங்களை நான் எளிதில் கண்டுகொண்டேன்! ஆனால் இனி என் நிலை எவ்விதம் மாறுமோ? நாககன்னிகையை நாகநாட்டிற்கு அழைத்துச் செல்வது என் விரதமல்லவா? இவள் தொடர்பால்-இவளிடம் இன்று எனக்கு ஏற்பட்டுள்ள பிரேமையால், நாககன்னியிடம் எனக்குள்ள கடமையை நான் நிறைவேற்றாமல் இருக்கமுடியாது! நாககன்னிகையிடம் நான் எவ்விதம் சூளுறவு கொண்டு வஞ்சினம் கூறியிருக்கிறேனோ, அவற்றை நான் எவ்விதத்திலும் நிறைவேற்றியே தீருவேன்! ஆனால் இவளுடைய தொடர்பினால் என் நிலை மேலும், வேறுவிதமாக மாறாதிருக்க வேண்டுமே! இவள் தந்தை என்னைக் காண்பானேயானால் மீட்டும் என்ன செய்ய எண்ணுவானோ? இவ்விடத்தில் மறைந்திருப்பதும் பேராபத்தையே தரும்! விரைவில் ஆக வேண்டியதை யோசித்துச் செய்ய வேண்டுமே...'— என்று பலவிதமாகச் சிந்தனை செய்யலானான்.

நீலனின் முகத்தை உற்று நோக்கியவாறே இருந்த நாககன்னிகை, அவன் ஏதோ தீவிர யோசனையில் ஈடுபட்டிருக்கிறான் என்று உணர்ந்தாள்.

**நீலன்-நாககன்னிகை சம்பாஷணை**

“நீலா, என்ன யோசனை? நான் நாகநாட்டிற்குப் போவதைப்பற்றியா? அல்லது, நல்லினியைப்பற்றியா?” என்று கேட்டாள். அவள் கண்களில் நீர் துளும்பியிருந்தது. ஆனால் முகத்தில் கவலையொளி இடையிடையே மின்னலிட்டது; கண்களிலே ஏக்கத்தின் நிழல் படர்ந்திருந்தது; எனினும், நல்லினியைப்பற்றி அவள் குறிப்பிடும்போது, இதழ்களின் புன்முறுவல் அவனை, விழிப்படையச் செய்தது.

“ஆம்! நான் யோசித்து என்ன செய்வது? எல்லாம் நம் யோசனைப்படியே நடக்கின்றனவா? நாம் இங்கு இந்த நிலையை அடைவோம் என்று யோசித்தோமா? யாவும் நம் அறிவுக்கும் எட்டாத ஒருவிதச் சக்தியின் நோக்கம்போலவே நடக்கும். ஆனால், உன்னை நாகநாட்டிற்கு அழைத்துச் செல்வது என் கடமை! அதை நான் மறப்பேன் என்று எண்ணிவிட்டாயா? உனக்கே நான் என்றும் ஏவல் செய்பவன். கடலிலே உயிரை

யும் மதியாமல் உனக்காகவே அல்லவா அலைகளோடு போராடி இங்குவந்தேன்; நாககன்னிகை இந்தத் தோழியின் உதவி உனக்குக் கிடைத்தது போலவே எனக்கும் வேறுவிதமாகக் கிட்டியது. உயிரற்ற உடலம்போல் இருந்த எனக்கு புத்துயிரளித்த பெருஞ் சக்தியை இவள் உடையவள்! என்றும் நான் அறியாத பேரின்பக் கிளர்ச்சியை என் மனத்திலே உண்டாகிய பெண்ணணங்கு இவள்! இனி நான் வேறு சொல்வதற்கில்லை......'' என்று நல்லினியை நோக்கிப் புன்முறுவல் செய்தான்.

## உள்ளம் குளிர்ந்தேன்

''நீலா என்மீதும் உனக்குக் கடமை இருப்பது போல் உன் மீதும் எனக்குக் கடமை உண்டாகி விட்டது. உன்னையும் நல்லினியும் கூட்டிவைத்த தெய்வத்தை வாழ்த்துகிறேன் ஆனால் என் மனப்புண்ணை நான் எவ்வாறு ஆற்றிக்கொள்ள முடியும்! நான் செய்த தீவினையை, நானே அனுபவிக்கிறேன். நீலா நாளைக்கே, என்னை நாகநாடு அனுப்புவதற்கு முயல்வதாக நல்லினி கூறுகிறாள் இவள் தந்தை, இவள் வார்த்தைகளை நிறைவேற்றுவார் என்று நம்புகிறேன். நீ இவளிடம் வைத்த நேயத்தை நான் கண்டு மகிழ்கிறேன். உங்கள் உறவு என் உள்ளத்தையும் உடலையும் குளிரச் செய்கிறது...'' என்று நாககன்னிகை கூறுகையில் தலை கவிழ்ந்திருந்த நல்லினி துணிவுடனும் குதூகலத்துடனும் பேசலானாள்.

''நாககன்னிகை, உங்கள் கவலையை நான் ஏற்றுக்கொள்ளுகிறேன். என் வார்த்தைகளை தந்தை மறுக்கவே மாட்டார். விரைவில் உங்களுக்கு மனம் குளிரச் செய்கிறேன். இதோ, நாழிகை ஆகிவிட்டது. நன்றாகப் பொழுதும் சாய்ந்து, நிலவு புறப்பட்டு விட்டது; சற்று களைப்பாறுங்கள்'' என்று கூறிவிட்டு சில கனிகளைக் கொணர்ந்து இருவருக்கும் முன்பு வைத்தாள்.

நீலனும் நாககன்னியும் அவற்றை அருந்திய பின்னர், ஒருபுறமாய் அமர்ந்து பேசிக்கொண்டிருந்தனர். நாககன்னிகை சிறிது கண்ணயரவே, நீலன் எழுந்து மாடத்தின் ஒருபுறமாக உலாவியவாறே சிந்தனையில் ஈடுபட்டான். நல்லினியும் நீலனைப் பற்றிய நினைவுடன் பலவாறு கலங்கியவளாய், நாககன்னியின் அருகிலே சாய்ந்து கண்ணயர்ந்தாள்.

கன்னிமாடத்தின் வாயில்களில் இரண்டு அலிகள் (ஆணும் பெண்ணும் அற்றவர்) கண்ணுறங்கிக்கொண்டே உட்கார்ந்திருந்தனர். நாழியாக ஆக எங்கும் நிசப்தம் நிலவியது. நாககன்னியும் நல்லினியும் பலவிதச் சிந்தனைக் காட்சிகளிலே மனம் ஒன்றியவாறே கண்ணயர்ந்திருந்தனர். நீலன் சிந்தனையலையிலே தவித்துக் கலங்கியவனாய், உறக்கத்தைத் தவிர்த்து உலாவிக்கொண்டிருந்தான். அவன் சிந்தனைக் காட்சியிலே மாறி மாறித் தோன்றிய உருவங்கள் நல்லினியும், நாககன்னியுமே! நல்லினியைப்பற்றி அவன் நினைக்கும் போதெல்லாம், நாககன்னியின் தோற்றம்மின்னலிடும். அவளைப் பற்றிக் கருதும்போதோ, நல்லினியின் அழகுருவம் அவன் உள்ளத்தை வருத்தும்.

## நல்லினி!
## நல்லினி!!

'நாககன்னியின் வாழ்க்கை சூனிய நிலையை அடைந்து, அவள் சோகத்திற்கே ஆளாகியிருக்கும் இந்நிலையில் நான், நல்லினியின் உறவை குதூகலத்தோடு பெறுவது முடியுமா? இதைக் கண்டு நாககன்னியின் மனம் கலங்காதா? அவள் வாழ்க்கைக்கு நான் கொடுமை செய்தேன் என்று கருதுவாளோ? ஆம், நான் நினைத்தவையும், செய்தவையும் பொறுக்க முடியாத கொடுமைகளே! ஆனால், நான் என் செய்வேன்? நாககன்னியின் வாழ்க்கையில் அவ்வளவுதான் அவள் பெறக்கூடிய இன்பங்கள். அவளை இனி எவ்வாறு குதூகலம் கொள்ளச் செய்யமுடியும்? ஆம், அந்த வஞ்ச நெஞ்சனைப் பழிவாங்கி, அவன் என்றும் தன் குற்றத்தை நினைந்து வருந்தும்படி செய்ய வேண்டும் என்று நான் அவள் முன் உறுதி கூறினேனே! அதை நான் நிறைவேற்றாமல் இருக்க முடியுமா? ஆம், அவள் உள்ளத்தில் பரவிய ஆறாத புண்ணை, அவ்வகையால் நான் ஒருவாறு ஆற்றிவிடக் கடமையுடையேன்! ஐயோ! என் அன்பின் தூய மலர், வாடிக் கருகிவிட, நான் ஆளாவேனோ? நாகநாடு சென்று நான், என்ன சொல்லுவேன்; மீளாப் பழிக்கு ஆளாவேனோ?...ஆ! இவள் கண்ணயர்ந்திருக்கிறாளா? இல்லை. துயர அலைகளிலே மறுகிக் கொண்டுதான் மனமுருகிக் கனவு காண்கிறாள்!...' என்று மனத்துயருடன், அவளை நோக்கியவன் நல்லினியையும் அடுத்தாற்போல் கண்டான். நிலவில் மலர்ந்த வெண்மலர்போல் ஒளி வீசும் அவள் முகத்தை ஆர்வமுடன் கண்களால் பருகுவான் போல் பார்த்து அருகில் சென்றவன், ஏதோ பெருஞ்சப்தம் கேட்டுத் துணுக்குற்று நின்றான். அவன் உடலில் நடுக்கம் உண்டாகவே பரபரப்புடன், ''நல்லினி, நல்லினி!'' என்றான். சட்டென்று கண்விழித்தவள் நீலனைக் கண்டதும் திகைப்பும் நாணமும் கொண்டு நோக்கினாள். மறுகணமே, பெருஞ் சப்தம் கேட்டு அவளும் பதறி எழுந்தாள். பேராரவாரம் எங்கும் காணப்பட்டது. நாககன்னியும் விழித்துக்கொண்டு, ''என்ன இது பேரிரைச்சலாகக் கேட்கிறது!'' என்று எழுந்தாள். நல்லினி, கன்னிமாடத்தின் வாயிற்புறம் ஓடினாள்; அப்போது எதிரே இரு வீரர் ஓடிவந்து, ''அம்மா, சோழ மன்னன் படையெடுத்து வந்திருக்கிறான்; தீவைச் சுற்றிலும் முற்றுகையிட்டிருக்கிறான்'' என்று கூறிச் சென்றனர். அதைக்கேட்டு நல்லினி அஞ்சி ஓடி, நீலனிடமும் நாக கன்னியிடமும் கூறினாள். ''சோழ மன்னனா!'' என்று சொல்லியவாறே இருவரும் நிலை கலங்கினர். ''இனி என்ன செய்வது,'' என்று நீலன் மயங்கி நின்றான்.

அந்த நள்ளிரவிலே, நீலன் முதலிய மூவர் மனத்திலும், 'இனி என்ன ஆகுமோ?' என்ற அச்சம் குடிபுகுந்தது. பொழுது புலர்ந்தால் எல்லாம் தெரிந்துவிடும் என்ற எண்ணத்தோடு மூவரும் கன்னிமாடத்தேயே தங்கிவிட்டனர்.

(தொடரும்)

# புத்தக விமர்சனம்

## I காதற்கதை-இத்தாலி

[இத்தாலிய ஆசிரியை கிரேஸியா டெலடா என்பவர் எழுதிய கதையின் மொழிபெயர்ப்பு. ஸ்ரீ க.நா. சுப்பிரமண்யம் மொழிபெயர்த்தது. விலை அணு 8. பக்கங்கள் 60.]

"சர்வதேசக் கதைகள்" என்ற மகுடத்துடன் திருவல்லிக்கேணி, ஜோதி நிலையத்தார் தொடர்ச்சியாகச் சில கதைப் புத்தகங்களை வெளியிட முடிவு செய்திருக்கின்றனர். 30 தேசத்து இலக்கியங்களிலிருந்தும் சிறந்த கதைகளைப் பொறுக்கி வெளியிடுவதென்பது அவர்கள் உத்தேசம். இப்போது இரண்டு கதைகள் புத்தக வடிவில் வெளியாகியிருக்கின்றன. இத்தாலிய ஆசிரியை கிரேஸியா டெலடா என்பவர் பல கதைகளையும், நாவல்களையும் எழுதியிருக்கிறர். இப்போது ஸ்ரீ க.நா. சுப்பிரமண்யம் மொழிபெயர்த்திருக்கும் "காதற்கதை"யும் அவர் எழுதியதுதான். இதில் ஆசிரியையின் மனப்போக்கு, மதத்திலுள்ள ஆசாபாசம், கதை புனைவதிலுள்ள அவரது திறமை முதலியஅனைத்தும்வெளியாகின்றன. ஸ்ரீ சுப்பிரமண்யம் ஸரளமான தமிழில் சுவாரஸ்யம் குன்ருமல் மொழிபெயர்த்திருக்கிறர்.

## II வெற்றி

[திருவல்லிக்கேணி ஜோதி நிலையத்தாரின் சர்வதேசக் கதை மலரின் 2-வது புத்தகம் "வாணி சரணன்" மொழி பெயர்த்தவர். எமிலிஸோலாஎழுதிய"வெற்றி" என்ற பிரஞ்சுக் கதையின் மொழிபெயர்ப்பு இது. விலை அணு, 8. பக்கங்கள் 56.]

கதாசிரியரைப்பற்றியும் கதையைப்பற்றியும் சுருக்கமான முற்குறிப்புடன் இப்புத்தகம் வெளிவருகிறது. யுத்தத்தில் சிக்கி நொடிந்த ஒரு பிரஞ்சுக் குடும்பத்தைப்பற்றிய கதை இது.யுத்த விபரீதங்கள், பற்றியும் அது தனிமனிதனின் வாழ்வுக்கு எந்தெந்த விதங்களில் உலை வைக்கிறது என்பது குறித்தும் இப்புத்தகம் விவரிக்கிறது.

## அதிகாரம் யாருக்கு?

[பவளமுத்திரை என்ற தலைப்பில் தமிழ்நாடு பிரசுரம் கம்பெனியார், 2-ஏ பூந்தமல்லி ஹைரோடு, பி. டி. சென்னை, வெளியிட்டது. இதில் முதல் புத்தகம் "புதுமைப் பித்தன்" எழுதியது. விலை அணு 10. பக்கங்கள் 45.]

"புதுமைப்பித்தன்" எழுதிய கட்டுரைகளும், கதைகளும் பல. இந்தப் புத்தகம் எழுதியவரும் அவரேதான். அரசாட்சியின் லட்சிய, லட்சணங்களை எடுத்துரைக்கும் நோக்கத்தோடு இப்புத்தகம் வரையப்பட்டுளது. ஆசிரியர் "புதுமைப்பித்தன்" தமது கருத்தை "முகப்புச் சாவி" (முன்னுரை)யில் விளக்க முற்பட்டிருக்கிறர். பாஷைத் தெளிவே பிரதான நோக்கமெனக் கொண்டு இம்முயற்சியில் ஈடுபட்டதாகத் தெரிவிக்கிறர். "முகப்புச் சாவி"யிலே அவர் குறிப்பிட்டிருக்கும் பல பதங்களையும், அமைப்பையும் கவனிக்கும்போதே அவரது முயற்சியிலுள்ள பெரிய பளுவை ஓரளவுஉணரமுடிகிறது. "ஏகாதிபத்தியம்: சர்வ தேசீயம்" என்ற தலைப்பில் எழுதப்பட்டுள்ள விஷயத்தில் "யுத்தம் நிற்பது என்பதின் தெளிவான பொருள் என்னவென்றல் தனி மனிதன் தன்னிடம் எவ்வாறெல்லாம் நடந்துகொள்ளக்கூடாது என்று ஒரு ஸமாஜத்தின் நிர்வாகம் கருதுகிறதோ அவ்வாறெல்லாம் தானும் பிற நாட்டு ராஜாங்க ஸ்தாபனங்களுடன் எல்லாம் நடந்துகொள்ளுவதில்லை என்று சம்மதித்து வடுப்படாத தன்து ஆதிபத்திய உரிமையில் ஒரு பகுதியை இழக்கத் தயாராக இருக்க வேண்டும் என்பதேயாகும்"—இதுபோன்ற சிற்சில வரிகள் இப்புத்தகத்தில் இடம் பெற்றிருக்கின்றன. விஷயம் பெரிதாகவிருப்பினும் விளக்கம் பெறுவதற்கு இரு முறையேனும் படிக்கும்படி ஏற்படுகிறது.

## அமெரிக்கா தலையிடுமா?

[பவள முத்திரை: 2. ஸ்ரீமான் எஸ். எஸ். மாரிசாமி எழுதியது. விலை அணு 10. பக்கங்கள் 48.]

இந்தியாவின் சுதந்திர லட்சியம் சித்தி பெறும் விஷயத்தில் இன்று பிரிட்டனுடன் தோளாடு தோள் நின்று சுதந்திரத்தை நிலை நாட்ட போரிடுவதாகப் பறைசாற்றும்அமெரிக்காதலையிடுமா? என்றகேள்விவிரிவானமுறையில் இப்புத்தகத்தில் பரிசீலனை செய்யப்பட்டிருக்கிறது. அமெரிக்கா இவ்விஷயத்தில் தலையிடாது என்பதை ஆசிரியர் தக்க ஆதாரங்களுடன் இறுதில் எடுத்துக் காட்டியுள்ளார்.

## தமிழர் கண்ட ஜவாஹர்

[பவள முத்திரை-3. எழுதியவர் ஸ்ரீ ஆர். கிருஷ்ணஸ்வாமி. விலை அணு 10. பக்கங்கள் 48.]

1936-ம் வருஷத்தில் காங்கிரஸ் மகாசபையின் தலைவராயிருந்த பண்டித நேரு சென்னை வந்து 16 நாட்கள் வரை தமிழ் நாட்டில்சுற்றுப்பிரயாணம் செய்தார். அச்சுற்றுப் பிரயாணத்தின்போது ஸ்ரீமான் கிருஷ்ணஸ்வாமியும்கூடச் சென்றிருந்தார். அப்போது தாம் நேருஜியிடம் கண்ட ரஸமான அம்சங்களையும், ஒவ்வொரு ஊரிலும் நடந்தவரலாற்றையும்தொகுத்து இப்புத்தகத்தில் விவரித்திருக்கிறர்.

## வ. உ. சிதம்பரம் பிள்ளை சரித்திரம்

[ஸ்ரீ பரலி சு. நெல்லையப்பர் எழுதியது. சக்தி காரியாலயத்தார் பிரசுரித்தது. விலை அணா 10. பக்கங்கள் 46.]

நாடு நலனுறச்செய்வதற்காக ஒவ்வொரு துறையிலும் பணியாற்றிய பெரியோர் பலர். அவர்களில் ஒருவர் ஸ்ரீ வ. உ. சிதம்பரம் பிள்ளை. முதன் முதலாக ஆங்கிலக் கம்பெனிக்குப் போட்டியாக கப்பலோட்டிக் காட்டிய வீரர் வ. உ. சி. பிள்ளை. அதன் பயனாய் அவர் அனுபவித்த இன்னல்கள் அனந்தம். ஸ்ரீ பரலி சு. நெல்லையப்பர் காலஞ் சென்ற ஸ்ரீ பிள்ளையுடன் நெருங்கிப் பழகியவர்களில் ஒருவர். எனவேஅவரதுவாழ்க்கைவரலாற்றை எழுத வேண்டுமென்று அவர் முற்பட்டது இயற்கை. ஸ்ரீ வ. உ. சி. பிள்ளையின் தேசபக்தி, தமிழ் ஆர்வம், முதலியவற்றைப்பற்றிய விவரங்களெல்லாம் இப்புத்தகத்தில் இடம் பெற்றிருக்கின்றன. ஸ்ரீ பிள்ளையைப் பற்றி கவியரசர் சுப்பிரமண்ய பாரதியார் பாடிய பாட்டுக்கள், ஸ்ரீ நெல்லையப்பர் இயற்றிய பஞ்சகம், நாமக்கல் ஸ்ரீ வெ. ராமலிங்கம் பிள்ளை பாடிய விருத்தம் ஆகியவையும் இதில் அடங்கியிருக்கின்றன.

## காற்றிலே மிதந்த கவிதை

[ஸ்ரீ மு. அருணாசலம் எழுதியது. சக்தி காரியாலயத்தார் வெளியிட்டது. விலை ரூ 1. பக்கங்கள் 108]

நாடோடிப்பாட்டுக்கள் கிராமவாசிகளிடையே வாய்மொழியாக வளர்ந்து ஊர் ஊராகப் பரவி வியாபித்தவையாகும். சகல விதமான ரஸங்களையும் நாடோடிப்பாட்டுக்களிலே காணலாம். ஈடற்ற கற்பனைகள் புகுந்த நாடோடிப்பாட்டுக்கள் பலவுண்டு. ஸ்ரீமான் அருணாசலம் அப்பாட்டுக்களில் சிலவற்றைச் சேகரித்து அவற்றின் கருத்துக்களை விளக்கிச்சிறு சிறு கட்டுரைகளையும் இப்புத்தகத்தில் எழுதியிருக்கிறார். ''மித்திரன்'' வாரப் பதிப்பிலே ''குருவிப்பாட்டு'' என்ற மகுடத்தில் அவர் எழுதியிருந்த நாடோடிப்பாட்டும் இப்புத்தகத்தில் சேர்க்கப்பட்டுளது. மொத்தம் 8 பாட்டுக்களும் அவை பற்றிய விளக்க உரையும் இப்புத்தகத்தில் வெளிவந்துள்ளன.

## திருமலை முருகன் பள்ளு

(பதிப்பாசிரியர் ஸ்ரீ மு. அருணாசலம், சக்தி காரியாலயத்தார் வெளியிட்டது. விலை ரூ 2. பக்கங்கள் 132.]

பெரியவன் கவிராயர் தென் பாண்டி நாட்டிலுள்ள திருமலை க்ஷேத்திரத்தில் எழுந்தருளியிருக்கும் முருகப்பெருமான் மீது இயற்றிய பாடல்கள். இவற்றை ஸ்ரீ அருணாசலம் மிகப் பழைய காகிதப் பிரதியொன்றிலிருந்து தேடிப் பிடித்து மிகுந்த பிரயாசையின் பேரில் பாட்டுக்களை முறைப்படி வரிசைப்படுத்தி புத்தக ரூபமாக்கியதாகத் தமது

நான்முகத்தில் தெரிவித்திருக்கிருர். பள்ளுப் பாட்டு என்ருல் என்னவென்பதை விளக்கிவிட்டு திருமலைப்பள்ளுபற்றிய விவரத்தையும் அவர் தெரிவித்துள்ளார். திருமலை வரலாறு, இதுபற்றிய நூல்கள், ஆசிரியரைப்பற்றிய விவரம், முதலியவற்றையும் முற்பகுதியில் விளக்கம் செய்யப்பட்டுளது.

## அட்லாண்டிக் சாஸனம்

[“சக்தி” ஆசிரியர் ஸ்ரீமான் தி. ஜ. ரங்கநாதன் எழுதியது. சக்தி காரியாலயத்தாரின் மின்னெளிப் பிரசுரம் என்ற தொகுதியின் இரண்டாவது புத்தகம் இது. விலை அணா 8.]

கடலிலே மிதந்த கப்பல்மீது அமர்ந்து ஜனநாயகத் தலைவர்களாக விளங்கும் பிரிட்டிஷ் பிரதம மந்திரி சர்ச்சிலும் ஜனுதிபதி ரூஸ்வெல்டும் கையொப்பமிட்டு வெளிவந்த “அட்லாண்டிக் சாஸனம்” பற்றியும் அதன் கருத்துகள் பற்றியும் ஸ்ரீ ரங்கநாதன் இச்சிறு புத்தகம் எழுதியிருக்கிருர். உலக சமாதானத்துக்கு இந்த சாஸனம் எவ்வளவு தூரம் உதவியாயிருக்கும், அது சாச்வதமான சமாதானத்துக்கு உகந்ததா என்பதையெல்லாம் அவர் ஆராய்ந்து சொல்லுகிருர்.

## தொண்டன் சிறுகதைத் தொகுதி

[தஞ்சை ஜில்லா வேளுக்குடி, போஸ்ட், தொண்டன் பிரசுராலயத்தார் வெளியிட்டது. விலை ரூ. 1-4-0 பக்கங்கள் 110.]

ஏற்கனவேபத்திரிகைகளிலும், சஞ்சிகைகளிலும் வெளிவந்த கட்டுரைகள், கதைகள் இவற்றையெல்லாம் சேர்த்து புத்தக வடிவாக்குவது என்ற முறை இப்போது தமிழ் நாட்டில் சர்வ சாதாரணமாகிவிட்டது. “தொண்டன்” சிறுகதைத் தொகுதி என்ற புத்தகமும் இம்முறைக்கு விலக்கில்லை. இதில் தொகுக்கப்பட்டிருக்கும் கதைகள் மொத்தம் 12. அவை ஒவ்வொன்றும் ஒவ்வொருவிதமான ரஸத்துடன் அமைந்திருக்கின்றன.

## பிரஞ்சு இலக்கியம்

[புதுச்சேரி இளைஞர் கழகத் தலைவர் ஸ்ரீ ரா. ஆளவந்தார் எழுதியது. புதுவை சந்தானம் பிரிண்டிங் ஒர்க்ஸ் அச்சிட்டது. விலை அணா 8. பக்கங்கள் 32.]

பிரஞ்சு தேசத்து இலக்கியம் இடைக்காலம்வரை எந்த நிலையிலிருந்தது என்பதை விளக்கிக் கூறும் புத்தகம் இது. அதன் ஆரம்ப நிலை, வளர்ச்சி முதலியவற்றை யெல்லாம் படிப்படியாக ஆசிரியர் எடுத்துரைத்திருக்கிறார். பிறமொழியிலுள்ள உன்னதக் கருத்துக்களை தமிழைத் தாய் மொழியாகக் கொண்டவர் உணர்ந்தறிய வேண்டுமென்ற விருப்பத்தோடு ஸ்ரீ ஆளவந்தார் இதை எழுதியுள்ளார். பிரஞ்சுப் புலவர்களின் வரலாறும் சுருக்கமாகப் புத்தகத்தில் வெளிவந்துளது.

——

## புத்தகவரவு

★

திருப்பனந்தாள் தல வரலாறு: திருத்துருத்தி தல வரலாறு.

[தருமபுரம் ஆதீனம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞான சம்பந்த பரமாசாரிய ஸ்வாமிகளின் விருப்பப்படி திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேச்வர ஸ்வாமிதேவஸ்தானத்தார் வெளியிட்டது. விலை அணா 2.]

இவ்விரு புத்தகங்களும் திருப்பனந்தாள், திருத்துருத்தி (குத்தாலம்) இவ்விரு ஸ்தலங்களின் மகாத்மியத்தை எடுத்துக் கூறுகின்றன.

ஸ்ரீ அன்ன பூர்ணஷ்டகம் ஆதி சங்கர பகவத் பாதாள் அருளியது. சிரோமணி ஸ்ரீ பி. எம். நடராஜ சர்மா (திருச்சி, பிஷப் ஹீயர் ஹைஸ்கூல், சமஸ்கிருத பண்டிதர்) கருத்துரையுடன் கூடியது. திருச்சி, தெப்பக்குளம், பங்களூர் மார்ட், பிரசுரித்தது. நாகரி எழுத்திலும், தமிழிலும் அர்த்தத்துடன் வெளியிடப்பட்டுள்ள ஸ்தோத்திரம் இது.

நடுநிசி மணி ஒலி: இது தமிழ் கலைப் பதிப்பகத்தின் 17-வது வெளியீடு. புத்தாண்டின் பொன் மலர் (1-1-44) வித்துவான் ஸ்ரீ அ. மு. பரமசிவானந்தம், தமிழ்க் கலை ஆசிரியர் காஞ்சிபுரம் எழுதியது.

திருநாரையூர்த் திருமுறை: லெட்சுமிபுரம் சொக்கலிங்க வித்யாசாலை வெளியீடு—5. ஸ்ரீ ந. சொ. அரு. அருணாசலன் "ஸ்ரீ முத்துக்குமார்" சரவண முதலியார் தெரு, தியாகராய நகர், சென்னை, பதிப்பித்தவர்.

—::—

சிறுவர் கதை

## பால்கன்-ஜீ-பாரீ

★

அன்பார்ந்த
சகோதர சகோதரிகளே!

தண்ணீரில் ஊசி மிதப்பதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? இதுவரையில் பார்த்திராவிட்டால் இப்பொழுது பார்க்கலாம். ஒரு பாத்திரத்தில் தண்ணீர், கொஞ்சம் வாஸிலைன், ஒரு சிறு துண்டு பிளாட்டிங் பேப்பர், இரண்டு ஊசிகள் இவ்வளவும் கொண்டு வாருங்கள். ஒரு ஊசியில் கொஞ்சம் வாஸிலைனைத் தடவி, அதை ஜலத்தில் மெதுவாக வையுங்கள். அப்பொழுது ஊசி அமிழ்ந்து போகாமல் மேலேயே மிதந்து கொண்டிருக்கும். இனி, அந்த பிளாட்டிங் பேப்பரை மிதக்கவிட்டு, அதன் மேல் ஊசியை வையுங்கள். (ஊசி தண்ணீரில் படாமலிருக்கும்படி பிளாட்டிங் பேப்பர் பெரிதாக இருக்க வேண்டும்.) இப்படி வைத்தால், சிறிது நேரத்தில் பிளாட்டிங் பேப்பர் அமிழ்ந்து போகும். ஊசி மாத்திரம் மிதந்து கொண்டிருக்கும். பார்த்தீர்களா இப்பொழுது இரும்பு தண்ணீரில் மிதக்கும் விந்தையை!

இம்மாதிரி கனபதார்த்தமாகிய ஊசி மிதப்பதற்கு, தண்ணீரின் ஒரு விசேஷத் தன்மையே காரணமாகும். அத்தன்மை என்னவென்பதை நீங்கள் மேல் வகுப்புகளில் படிப்பீர்கள்.

சகோதரன் ஹரி.

# - ஆஸ்திரேலியா - நியூஸிலந்து ஒப்பந்தம் -





ஆஸ்திரேலியாவுக்கும்-நியூஸிலந்துக்கும், இடையே பஸிபிக் பாதுகாப்பு ஒப்பந்தம் ஒன்று செய்யப்பட்டது. அதில் கையொப்பமிடுமுன் இரு நாட்டுப் பிரதிநிதிகளும் அடங்கிய மகாநாட்டில் ஆஸ்திரேலியப் பிரதம மந்திரி மிஸ்டர் கர்டின் ஓர் பிரசங்கம் செய்தார்.

(இடது)

பிரிட்டன் தயாரித்திருக்கும் ''மிட்ஜட்'' என்ற புதுவகை ஸப்மரீன் இது. (ரேடியோ மூலம் வந்த படம்)

யுத்த நிறுத்த நிபந்தனைகளை தயார் செய்து நிர்ணயம் செய்வதில் முனைந்திருக்கும் ஐரோப்பிய ஆலோசனைக் கமிஷனின் முக்கியப் பிரதிநிதிகள் இவர்கள். இடது புறத்திலிருந்து ஸர் வில்லியம் ஸ்டிராங், எம். குஸேவ், மிஸ்டர் ஜான் வின்னன்ட். (ரேடியோ மூலம் வந்த படம்)



Printed and Published by T. S. Visvanatha Iyer, B. A., at the "Swadesamitran" Power Press, Mount Road, Madras.—*Editor*: C. R. Srinivasan, B. A.